# நகரத்தார் சங்கம்

23, 24 - கவுலிபிரவுன் சாலை

கோவை



# கட்டிடத் திறப்பு விழா சிறப்பு மலர்

நவம்பர் 17, 1974

ஞாயிற்றுக்கிழமை



## மலர்க்குழு

S. தியாகராஜன், B.A., B.L.
தலைவர்

L. சோமு
SM. ரெங்கனுதன்
S. அண்ணுமலை
S. அழகப்பன், B.E.
RM. இராமனுதன்
AT. சிங்காரம், B.Sc.
AR. K. இராமனுதன்
AR. முத்துவீரப்பன்



பதிப்பாசிரியர்

RL. சாத்தப்பன், B.Sc., A.C.B.I. (Lond)

# இதனுள்.....



# முன்னுரை

தமிழகத்தின் தலைநகரங்களில் நகரத்தார்கள் சங்கங்கள் நிறுவி நற்பணி பல புரிந்து வருகின்றனர். கோவை நகர்வாழ் நகரத்தார்கள் தமது பணி மேலும் சிறப்பாக நடைபெற சங்கத்திற்கென கட்டிடம் ஒன்று இன்றியமையாததை உணர்ந்து அதற்கான பெருமுயற்சிகள் செய்து நகரின் மையத்தில் புதிய கட்டிடம் ஒன்றையும் உருவாக்கியுள்ளனர். இவ்வாறு சங்கத்திற்கென நகரத்தார்களில் முதன் முதலாக மனை இடம் வாங்கி புதியதொரு கட்டிடத்தை நவீன முறையில் நிறுவிய பெருமை கோவைவாழ் நகரத்தாருக்கே உரித்தாகும். புதிய கட்டிடத் திறப்பு விழாவினை யொட்டி சிறப்புமலர் வெளியிடுவது சால்புடைய செயலாகும்.

சிறப்பு மலரினைத் தமிழகம் போற்றும் தனிப்பெரும் கவிஞரும் நம்மில் ஒருவருமான **கவிஞர் கண்ணதாசன்** அவர்கள் வெளியிடுவது பெருமைக்குரிய தாகும்.

சங்கத்தின் தலைவர் திரு. SM. KR. கருப்பன் செட்டியாரவர்களுக்கும் தம் சொந்தப் பணியாகக் கருதி அயராது உழைத்து முழுப் பொறுப்பேற்று புதிய கட்டிடம் உருவாவதற்கும் அதே நேரத்தில் இம் மலரினை வெளியிடுவதற்கும் மூல காரணமாக விளங்கும் சங்கத்தின் நிர்வாகச் செயலாளர் திரு. L. சோமு அவர்களுக்கும், அவர்களுக்கு உறுதுணையாக இருந்து பெரிதும் உதவிய சங்கத்தின் பொதுச்செயலாளர் திரு. S. M ரெங்கநாதன். அவர்களுக்கும்—

வாழ்த்துக்கள், கட்டுரைகள், கவிதைகள் வழங்கி இம் மலரினைச் சிறப்புறச் செய்த பெருமக்களுக்கும்—

இம் மலரினை வெளியிடும் முழுப் பொறுப்பை உவகையுடன் ஏற்று தக்கவாறு தொகுத்து சிறந்த முறையில் வெளியிட உதவிய திரு. R. L. சாத்தப்பன், B. Sc. அவர்களுக்கும்—

விளம்பரங்கள் தந்துதவிய தொழிலதிபர்கள், வணிகப் பெருமக்கள் அனைவருக்கும், விளம்பரங்கள் சேகரித்துத் தந்த செயற்குழு மற்றும் மலர்க்குழு உறுப்பினர்களுக்கும், மற்றும் திரு. S. அண்ணாமலை அவர்கள், திரு. S. அழகப்பன், B. E. அவர்கள், திருவாளர்கள் ராஜாராம், சுப்பிரமணியன் செட்டியார், SP. அடைக்கப்ப செட்டியார், சேலம் திரு. சித. நடராசன், M. A. ஆகியோருக்கும்—

அனைவரும் போற்றும்வண்ணம் கண்கவர் வண்ணங்களில் இம்மலரினைச் குறுகிய காலத்தில் சீரிய முறையில் அச்சிட்டுத் தந்த கோவை ''கலைக்கதிர்'' அச்சகத்தாருக்கும்—

மற்றும் இம்மலரினை வெளியிட உதவிய ஏனைய அன்பர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியினையும் வணக்கத்தினையும் மலர்க்குழுவின் சார்பில் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அன்பன்,

S. தியாகராசன், B.A., B.L.
தலைவர், மலர்க்குழு.

கோவை,
17—11—1974




# பதிப்புரை

கவின்மிகு கட்டிடம் ஒன்றை உருவாக்கிய நகரத்தார் சங்கத்தினர், அதன் திறப்பு விழாவினை ஒட்டி இச் சிறப்பு மலரை வெளியிடுகின்றனர்.

மலர் சிறப்பாக வெளிவர டாக்டர் ராஜா சர் முத்தையா செட்டியார், கு. காமராஜ் போன்ற பல பெரியோர் ஆசி வழங்கியுள்ளனர். மறைந்த கலைத்தந்தை கருமுத்து தியாகராசன் செட்டியார் அவர்களும், தமிழ்க்கடல் ராய. சொ. அவர்களும் இன்று நம்மிடையே இல்லாவிட்டாலும் அவர்களது மனம் நிறைந்த வாழ்த்துக்கள் இம் மலருக்குக் கிடைத்திருப்பது நமது பெரும் பேருகும்.

வெள்ளிவிழாக் கொண்டாடி வெற்றி வேந்தராகத் திகழும் இந்த நூற்றுண்டின் இணையற்ற கவிஞரான கண்ணதாசன் கவிதை இம் மலரில் இடம்பெற்றிருப்பது இதன் சிறப்பை மிகைப்படுத்துகிறது.

கம்பனடிப்பொடி திரு. சா. கணேசன் அவர்களின் கவிதையும் திருமுருக கிருபானந்தவாரியாரின் கட்டுரையும் இம் மலருக்கு மணம் தருகின்றன. நம் சங்கத் தலைவர் திரு. சோம. கரு. கருப்பன் செட்டியார் அவர்கள் நகரத்தார் திருமணம்பற்றி எழுதியுள்ளார்கள். இரு ஆராய்ச்சி கட்டுரைகள் இதில் இடம் பெற்றுள்ளன. கோவலன் சமணனு? என்ற திடுக்கிடும் கேள்வியை எழுப்பி விடை காணுகிறுர் திரு. முரு. பழ. இர. பாடுவார் முத்தப்ப செட்டியாரைப் பற்றிய பல செய்திகளைத் திரு. சித. நடராசன் தொகுத்துத் தந்துள்ளார்.

கட்டிடத்தை உருவாக்கும் பணியில் மும்முரமாக ஈடுபட்டிருந்த திரு. எல். சோமு அவர்களும், திரு. SM. ரெங்கனுதன் அவர்களும் நிறைய வேலைகள் இருந்தபோதிலும் நல்ல கட்டுரைகளைத் தந்துள்ளனர். பேரூர் தர்மநிதி பற்றி திரு. ஆண்டியப்ப செட்டியார் விபரங்கள் தந்துள்ளார்.

திருவாளர்கள் L. சோமு, SM. ரெங்கநாதன், S. தியாகராஜன் ஆகியோருக்கும் உற்சாகமும் உழைப்பும் நல்கிய பெருமக்களுக்கும், கண்ணைக் கவரும் வகையில் அச்சிட்டு தந்த 'கலைக்கதி'ருக்கும் இதயம் கனிந்த நன்றி உரித்தாகுக.

ஆர். எல். சாத்தப்பன்



# தலைவர் உரை

எல்லாம் வல்ல எம்பெருமான் திருவருளால் கோவை மாநகரில் நகரத்தார் சங்கம், ராஜா சர். மு. அ. முத்தையா செட்டியாரவர்கள் தலைமையில் அன்னாரது வாழ்க்கைத்துணைவி பெருமதிப்பிற்குரிய ராணி மெய்யம்மை ஆச்சி அவர்களால் குத்துவிளக்கேற்றி ஆரம்பித்து வைக்கப்பட்டது. இச் சங்கம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ச்சிபெற்று அது தனக்கென சொந்தமாக ஒரு இடத்தையும் வாங்கி அதில் சிறப்பாகக் கட்டிடமும் அமைக்கப்பெற்று, இன்று அக் கட்டிடத்தின் திறப்புவிழாவும் சீரிய முறையில் பெருமையுடன் நடைபெறுகிறது.

இச் சங்கத்தின் வளர்ச்சி பற்றி இப்போதைய பொதுச்செயலாளர் திரு. SM. ரெங்கனுதன் அவர்களும், கட்டிடத்தைப்பற்றி திரு. L. சோமு அவர்களும் இம் மலரில் தனித்தனியே விரிவாக எழுதியுள்ளார்கள். எனினும் இதன் தோற்றம், வளர்ச்சி ஆகியன பற்றி சிறிதளவாவது கூறவேண்டியது என்னுடைய கடமையாகும்.

நம் சங்கம் பேரூரில் 1965-ம் ஆண்டு மார்ச் மாதம் 17-ம் நாள் ஆரம்பிக்கப்பெற்று, முதல் தலைவராக நம் அன்பிற்குரிய திரு. அரு. லெ. வெ. நடராசன் செட்டியார் அவர்கள் பதவியேற்று, நம்மை நல்ல முறையில் வழிநடத்திச்சென்றார்கள். அவர்கள் காலமானபின்னர், 9—1—1972 அன்று நடந்த பேரவையில் நம் நகரத்தார் பெருமக்கள் யாவரும் இட்ட அன்புக் கட்டளைக் கிணங்க தலைமைப் பொறுப்பை நான் ஏற்றுக்கொண்டேன். இச் சங்கத்தின் பணிகளில் என்னோடு துணைநிற்க திருவாளர்கள் PL. S. RM. இராமனுதன் செட்டியார், K. இராமனுதன் செட்டியார் ஆகியோரை துணைத் தலைவர்களாகவும், திரு. SM. ரெங்கனுதன் அவர்களை

பொதுச்செயலாளராகவும். திரு. L. சோமு அவர்களை நிர்வாகச் செயலாளராகவும், திரு SV. சிவனடியான் செட்டியார் அவர்களை பொருளாளராகவும் தேர்ந்தெடுத்தனர். மேலும் இருபத்தைந்து செயற்குழு உறுப்பினர்கள் நியமிக்கப்பெற்றனர்.

இச் சங்கத்தின் வளர்ச்சியில் நாங்கள் தீவிர ஆர்வம் காட்டி ஏற்கனவே இதற்காக வாங்கபபட்டிருந்த இடத்தில் கட்டிடம் கட்ட நிச்சயம் செய்தோம். எல்லோருடைய அன்பு மனங்களும் கூடி, 10—9—1972 அன்று நல்ல வேளையில் கட்டிடத்திற்கான அடிக்கல் நாட்டப்பெற்றது. நம் சங்க உறுப்பினர்கள் பலரும் நன்கொடையாகவும், கடனுகவும் பொருளுதவி செய்தனர். கட்டிடத்தின் கட்டுமான வேலைகளைக் கவனிப்பதற்காக ஒரு கட்டிடக் குழு நியமிக்கப்பெற்றது.

மெய்வருத்தம் பாரார் பசி நோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொளார் செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணு யினர்.

என்ற செய்யுளுக்கு ஏற்ப, திரு. L. சோமு அர்களும். திரு. SM. ரெங்கனுதன் அவர்களும் மற்றும் நம் சங்க அங்கத்தினர்கள் யாவரும் எல்லா வகையாலும் உதவிகள் செய்தனர். ஊர்கூடி தேர் இழுத்ததுபோல கோவை நகரத்தார் அனைவரும் சேர்ந்து இம் மகத்தான காரியத்தை திறம்படச் செய்துள்ளார்கள். அவர்கள் யாவருக்கும் நம் சங்கத்தின் சார்பாக அன்புகலந்த நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

கோவை நகரத்தார்களின் ஒத்துழைப்பின் சின்னமாக இன்று கட்டிடம் முழுமை பெற்று, திறப்புவிழாவிற்கும் சிறப்பாக ஏற்பாடு செய்துள்ளோம். மேலும் இவ்விழா சிறக்க, மலர் ஒன்று வெளியிடத் தீர்மானிக்கப்பெற்றது. மலருக்கு வாழ்த்துரைகள், எழுத்தோவியங்கள், விளம்பரங்கள் தந்த பெருமக்களுக்கும் மலரைச் சிறப்பாக வெளியிட உதவிய திருவாளர்கள் எஸ். தியாகராசன், ஆர். எல். சாத்தப்பன் ஆகியோருக்கும் சங்கத்தின் சார்பில் நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இச் சங்கம் மேலும் மேலும் வளர்ச்சியடைந்து எல்லோருக்கும் எல்லாவகையான நன்மைகளையும் செய்து உன்னதமான பெயரெடுத்து உலகெலாம் இதன் புகழ் பரவி எந்நாளும் வாழ எல்லாம் வல்ல திருவருளின் திருப்பாதங்களில் பிரார்த்திக்கொண்டு இதனை நிறைவு செய்கிறேன்.

SM. KR. கருப்பன் செட்டியார்
தலைவர். நகரத்தார் சங்கம், கோவை



செட்டிநாட்டரசர் டாக்டர்

**ராஜா சர் மு. அ. முத்தையா செட்டியார் அவர்கள்**

தேமதுரத் தமிழிசைக்கு
தென்மதுரையில் சங்கம் கண்ட
நாமகளின் நற்புதல்வ!
நகரத்தார் நல்வாழ்வே நின்எண்ணம்!



கருமுத்து தியாகராசன் செட்டியார்

ஆலைக்கு அரசர்
அழகுதமிழுக்குக் காவலர்
கல்விக்கு வித்தகர்
கட்டிடக்கலை நிபுணர்
புகழ் வாழி! வாழி!

# நகரத்தார் சங்கம், கோவை



SM. KR. கருப்பன் செட்டியார்
தலைவர்



PL. S. RM. இராமநாதன் செட்டியார்
துணைத் தலைவர்



K. இராமனுதன் செட்டியார்
துணைத் தலைவர்

# நகரத்தார் சங்கம், கோவை



SM. ரெங்கநாதன்
பொதுச் செயலாளர்



L. சோமு
நிர்வாகச் செயலாளர்



SV. சிவனடியான் செட்டியார்
பொருளாளர்

**Dr. RAJAH**
**Sir MUTHIAH CHETTIAR**
**of Chettinad**

Chettinad House Adyar,
Rajah Annamalaipuram P O.
Madras-28.

4—11—1974

அன்புள்ள ஐயா,

17—11—1974இல் கோயமுத்தூர், நகரத்தார் சங்க கட்டிட திறப்பு விழா ஏற்பாடுகள் விமரிசையாக செய்து வருவதாக எழுதியிருக்கும் தங்கள் அன்புள்ள 2—11—1974உ கடிதம் கிடைத்தது. திருப்தி. திறப்பு விழாவினையொட்டி சிறப்பு மலர் ஒன்று வெளியிட ஏற்பாடுகள் செய்துவருவதும் மகிழ்ச்சிக்குரிய நற்செய்தியாகும். நம் நகரத்தார்கள் ஆங்காங்கே கோயில்களை புதுப்பித்தலும், இயல், இசை, நாடகம் முதலியவைகளை பரப்புவதிலும் தமிழிசை எங்கும் ஒலிக்கவும், மாணவ மாணவிகளுக்கு கல்விக்காகவும், திருமணங்களுக்காகவும் உதவி செய்தலும் போன்ற பல துறைகளில் தொண்டாற்றி வருவது நாடறிந்த விஷயம். கோயமுத்தூர் நகரத்தார் சங்கம் செய்துவரும் சேவையையும் தங்கள் சங்கத்தின் அங்கத்தினர்கள் அனைவரையும் மிகவும் பாராட்டுகின்றேன். கட்டிடத் திறப்புவிழாவும் சிறப்பாக நடைபெறவும், தங்கள் சங்கம் மேன்மேலும் தம் நற்பணியை தொடர்ந்து சிறப்பாக செய்துவரவும் பிரார்த்திக்கின்றேன்.

தங்கள் அன்புள்ள

(ஒப்பம்) **மு. அ. முத்தையா செட்டி**

கருமுத்து தியாகராசன்

மதுரை
22—4—1974

## வாழ்த்துரை.

கொங்கு நாட்டின் தலைநகரமாம் கோவை மாநகரில் சங்கம் நிறுவிச் சமூகப் பணியும் மன்பதைத் தொண்டும் ஆற்றிவரும் நகரத்தார் பெருமக்கள் பத்து ஆண்டுகளுக்குள் நமது சங்கத்திற்கெனத் தனிக் கட்டடம் நிறுவி, சிறப்பு மலர் வெளியிட்டு, விழா எடுக்க முற்பட்டுள்ளமை கண்டு மிக்க மகிழ்ச்சியடைகின்றேன்.

மன்னவர் பின்னோர் என்று பாவலரும் பாராட்ட, திரைகடல் கடந்து திரவியம் தேடி, தாளாற்றித் தந்த பொருளைத் தக்கார்க்கு வேளாண்மை செய்து, செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருந்து, காவெடுத்தும் குளந் தொட்டும் கற்றளி எழுப்பியும் இறைபணி புரிந்து, வையகம் வாழ்த்த புகழ் சான்று வாழ்ந்து வந்த நம் நகரத்தார் மர பினர், கால மாற்றத்தால் சிறுமையுற்று நலியலாயினர்.

இந்நிலைமையை மாற்றி, நமது பழம்பெரும் சமூ கத்தின் தொல் புகழை மீண்டும் நிலைநாட்ட நகரத்தார் சங்கங்கள் பல தோன்றிச் சொல்லரும் நற்பணிகளைச்செய்து வருகின்றன. அவற்றுள் கோவை மாநகர் நகரத்தார் சங்கம் நடுநாயகமாக விளங்குதல் கண்டு மகிழாதார் இல்லை.

இச்சங்கம் மேன்மேலும் வளர்ந்து சிறப்புறவும், கட்டடத் திறப்பு விழா இனிதே நடைபெறவும், சிறப்பு மலர் நலமுற அலர்ந்து நறுமணம் பரப்பவும், நகரத்தார் சமூகம் சங்க காலத் தொல்புகழை பெற்றுச் சிறப்புற்றிலங்கவும் ஆவலாய் அவிர்சடை அண்ணல் அருள் புரிவராக.

(ஒப்பம்) **கருமுத்து தியாகராசன்**

அ. மு. மு. அ.

மதராஸ்-18

17—4—1974

அன்புடையீர்,

தங்களின் 22—3—1974-ஆம் தேதி கடிதம் கிடைத்தது. கோவை நகரத்தார் சங்கத்திற்கு கௌலிபிரவுன் ரோட்டில் சொந்தக் கட்டிடம் கட்டப்பெற்றிருப்பதும், அதன் திறப்புவிழாவில் ஒரு சிறப்பு மலர் வெளியிடவிருப்பதும், மிகவும் மகிழ்ச்சியுறும் செய்தியாகும்.

ஒவ்வொரு முக்கிய நகரங்களிலும், நகரத்தார் சங்கங்கள் தோன்றி, நற்பணிகள் பல ஆற்றி வருகின்றன. அவைகளின் பணிகள் மேன்மேலும் தொடர, சொந்தத்தில் கட்டிடம் இருப்பது இன்றியமையாததாகும். அதை உணர்ந்து, கோவை நகரத்தார்கள், சொந்தக் கட்டிடம் ஒன்றை, கோவை நகரத்தார் சங்கத்திற்கு ஏற்படுத்த எடுத்துக்கொண்ட முயற்சிக்கும், அதை முடித்துவைத்து, விழா நடத்தி விழாவில் சிறப்பு மலர் ஒன்று வெளியிட இருப்பதற்கும், எனது பாராட்டுதல்கள். சங்கம் தனது பணிகளைத் தொடர்ந்து செவ்வனே ஆற்றி சிறப்புடன் வளர எனது நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

தங்களன்புள்ள,

(ஒப்பம்) அருணாசலம்

கு. காமராஜ்

போன்: 441373

8, திருமலைபிள்ளை ரோடு

தி. நகர், சென்னை-600017

28—3—1974

அன்புடையீர்,

வணக்கம். தங்களுடைய கடிதம் கிடைத்தது. நகரத்தார் சங்கத்தின் சார்பில் புதிய கட்டிடம் பூர்த்தி யாகும் நிலையில் இருப்பது அறிந்து சந்தோஷம்.

கட்டிடத் திறப்பு விழாவினை யொட்டி வெளியிடும் சிறப்பு மலர் சிறந்த முறையில் வெளிவரவும், தங்களுடைய முயற்சி வெற்றி பெறவும் என்னுடைய நல்வாழ்த்துக்கள்.

தங்களன்புள்ள,

(ஒப்பம்) கு. காமராஜ்

**L. ALAGUSUNDARAM CHETTIAR**

PASUMALAI

MADURAI

13—4—1974

நம் கோவை நகரத்தார் சங்கத்திற்கு புதுக் கட்டிடம் சொந்தமாக கட்டியிருப்பது ரொம்பவும் மகிழ்ச்சிக்குரியது. கோவை நகரத்தார் சங்கம் பல ஆண்டுகளாக ரொம்ப நல்ல முறையில் நமது சமூகத்திற்கு பணியாற்றி வருவது பாராட்டத்தக்கது. இப்பொழுது அதற்கென ஒரு சொந்தக் கட்டிடம் அமைந்திருப்பது அங்கத்தினர்களுக்கு ரொம்பவும் உபயோகமாக இருக்கும், சங்கம் மென்மேலும் வளர்ச்சி அடைந்து நல்ல பணியாற்ற விரும்புகிறேன். கோவை நகரத்தார் பெருமக்களுக்கு என்னுடைய நல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

கட்டிடத் திறப்பு விழாவும் சிறப்பாய் நடந்து எல்லோருக்கும் சகல நன்மைகளும் உண்டாக திருப்பேரூர் நடராஜப் பெருமானைப் பிரார்த்திக்கின்றேன்.

(ஒப்பம்) **லெ. அழகுசுந்தரம் செட்டியார்**

L. NARAYANAN CHETTIAR

VISALAKSHI
MADURAI-2

2—4—1974

கோவை நகரத்தார் சங்கம் தங்கள் சொந்தக் கட்டிடத்தை எழுப்பியிருப்பது வாழ்த்துதலுக்கும் பாராட்டு தலுக்கும் உரியது. நகரத்தார் பெருமக்கள் அந்நிய நாட்டிலும் சரி, உள் நாட்டிலும் சரி, தெய்வப் பணியிலும், தமிழ்ப் பணியிலும், சைவப் பணியிலும் சிறப்பாக ஈடுபட்டு பயனடைந்து முன்னேற்றம் கண்டவர்கள். கோவை நகரத்தார்களின் இச் சீரிய முயற்சி எல்லா வகையாலும் வெற்றிபெற அங்கையற்கண்ணி தன்னெடும் அமரும் ஆலவாய் அண்ணலின் திருவருளைச் சிந்தித்து நல் வாழ்த்துக் களைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

(ஒப்பம்) **லெ. நாராயணன்**

**A. C. MUTHIA**

SOUTH INDIA HOUSE
99. Armenian Street,
Madras 1

29th March 1974

Dear Sir,

I am glad to learn from your letter that the inauguration of your new building is to take place shortly and that you are bringing out a souvenir to commemorate this occasion.

I wish the function all success.

Yours Sincerely,

(Sd.) A. C. MUTHIA

**M. M. MUTHIAH**

"Tiam House"
11/12, North Beach Road
MADRAS-1

17—4—1974

அன்புடையீர்,

தங்களின் 22—3—1974-ஆம் தேதிக் கடிதம் கிடைத்தது. கோவை நகரத்தார் சங்கத்திற்கு, கௌலிபிரவுன் ரோட்டிலுள்ள இடத்தில் கட்டிட வேலைகள் பூர்த்தியாகித் திறப்புவிழா நிகழவிருப்பதும் அதில் ஒரு சிறப்பு மலர் வெளியிட இருப்பதும் அறிந்து மிக்க மகிழ்ச்சியடைகின்றேன்.

கோவை நகரத்தார் சங்கம், தனது பணிகளைச் செவ்வனே செய்து மென்மேலும் புகழும் கீர்த்தியும் பெற வேண்டுமென்று எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறேன். விழா சிறப்புடன் நடைபெறவும், மலர் நல்ல முறையில் வெளிவரவும் எனது நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்களன்புள்ள,

(ஒப்பம்) மு. மு. முத்தையா

# செயற்குழு உறுப்பினர்கள்



AL. சிங்காரம் செட்டியார்



R. சேக்கப்பன்
(செயற்குழு & மலர்க்குழு உறுப்பினர்)



AT. சிங்காரம்
(செயற்குழு & மலர்க்குழு உறுப்பினர்)



SP. அடைக்கப்ப செட்டியார்



RM. இராமனுதன் செட்டியார்
(செயற்குழு, கட்டிடக்குழு & மலர்க்குழு உறுப்பினர்)

# செயற்குழு உறுப்பினர்கள்



N. K. நாகப்ப செட்டியார்
(செயற்குழு & கட்டிடக்குழு உறுப்பினர்)



SM. M. முத்தப்ப செட்டியார்
(செயற்குழு & கட்டிடக்குழு உறுப்பினர்)



VE. அழகப்பன்



N. சிவனடியான்



C. S. வாசன்



K. மாணிக்கம் செட்டியார்

**R. RAMANATHAN CHETTIAR**

Greetwell
Chetput,
MADRAS-31

22—4—1974

அன்புடையீர்,

கோவை நகரத்தார் சங்கம் கட்டுகிற புதிய கட்டிடம் பூர்த்தியாகிறதைத் தெரிந்து சந்தோஷம் அடைகிறேன். சங்கமும் தொடர்ந்து நல்ல சேவைகள் நாட்டுக்கும், மக்களுக்கும் செய்யவேணுமென்று கடவுளைப் பிரார்த்திக்கிறேன்.

தங்கள்

(ஒப்பம்) **ஆர். ராமனுதன் செட்டியார்**

**Sri Ramakrishna Mission Vidyalaya**

Sri Ramakrishna Vidyalaya P. O.,
COIMBATORE-641020
S. INDIA

27—3—1974

அன்புடையீர்,

கோவை நகரத்தார் சங்கத்திற்கு புதிய கட்டிடம் கட்டி திறப்பு விழா நடக்க இருப்பது அறிய சந்தோஷம்.

சங்கம் செவ்வனே இயங்கி, நாட்டிற்கும் மக்களுக்கும் சிறந்த சேவை செய்து, சிறப்பெய்த பிரார்த்திக்கிறேன்.

தங்கள் அன்புள்ள,

(ஒப்பம்) **தி. சு. அவினாசிலிங்கம்**

**Mrs. UMAYAL RAMANATHAN** Karaikudi-623003
*Secretary*
Dr. Alagappa Chettiar Educational Trust

## வாழ்த்துரை

கோவை நகரத்தார் தேவை மிகுந்த நம் எளியவர்க்கு எல்லா வகையாலும் நல்ல உதவிகள் பல செய்து வருவது நகரத்தார் சமூகம் அறிந்ததொன்று. அச் சங்கம் இன்று அழகிய கட்டிடம் பெறுவது மகிழ்ச்சிக்குரியது.

''அடையா நெடுங்கதவும் அஞ்சேல் என்ற சொல்லும்'' கட்டிடத்தின் சிறப்பாய்க் காலமெலாம் விளங்க, திருப்பேரூர் நடராஜப் பெருமானின் திருவடிகளே வணங்குகிறேன்.

தேவை அறிந்து உதவும் கோவை நகரத்தார் சங்கம் சேவை பல செய்து சிறப்புடனே வாழ்ந்திடுக.

**Dr. Sm. LAKSHMANAN,**
PH. D. (Lond.)
D. I. C., A. M. Inst. F., M. I. I. Ch. E., A. M. I. E.
Professor of Chemical Engineering
Head of the Department of Technology and
Dean, Faculty of Engg. and Tech.
ANNAMALAI UNIVERSITY

ANNAMALAINAGAR 608101
(Tamilnadu)

## வாழ்த்துரை

''நெஞ்சை யள்ளும் சிலப்பதிகாரத்தில்'' இளங்கோவடிகள் பாடியபடி கடல் கடந்து பெரும் பொருள் ஈட்டி வந்தது நகரத்தார் சமூகம். ஆலயப் பணி, அறப் பணி செயலுடையது நம் சமூகம். நாட்டுப் பற்றும் மொழிப் பற்றும் கொண்டது நம் சமூகம். சைவமும் தமிழும் தழைத்து இனிதோங்க நூல்கள் பல இயற்றிய துறவி பட்டினத்தார் நம் இனத்தவர் ஆவார். இந்நூற்ருண்டில் தமிழ் தழைக்க, தமிழிசை பரவ, கலை பல செழிக்க தனி ஒருவராய் பல்கலைக் கழகம் நிறுவிய பெருங்கொடை மன்னர் டாக்டர் ராஜா சர் அண்ணுமலைச் செட்டியாரவர்களைப் பெற்றெடுத்தது நம் சமூகம். தந்தைக்கேற்ற தனயனுய் கல்வி, தொழில், வாணிபம், போன்ற பல்வேறு துறைகளில் நம் இனத்தவர்கள் வளர்ச்சியுற பெரிதும் உதவி செய்துவரும் பத்மபூஷன் அண்ணுமலைப் பல்கலைக் கழகம் இணைவேந்தர் டாக்டர் ராஜா சர் முத்தைய வேள் அவர்களும் கல்வியும் தொழிலும் கண்ணெனப் பேணும் கலைத் தந்தை உயர்திரு கருமுத்து தியாகராசச் செட்டியாரவர்களும் கோயம்புத்தூர் நகரத்தார் சங்கத்திற்குப் புரவலர்களாய் இருப்பது பெரும் பேருகும்.

நம் சமூகத்தில் நலிவுற்றவர்களுக்கு கோயம்புத்தூர் நகரத்தார் சங்கம் போன்ற வேறு பல ஊர்களில் உள்ள நம் சங்கங்கள் கல்வித் துறையில் முன்னேற இளைஞர்களுக்குப் பொருளுதவி வழங்கி வருவது பாராட்டற்குரியது. இவ்வுதவி பெற்று மேம்பாடடைந்த பொறி இயலார் உளர். மருத்துவர் உளர். வேளாண்மை விற்பன்னர் உளர். பட்டம் பெற்ருேரும் படித்து முடித்தோரும் பலர்.

பல பல துறைகளிலே நம் மரபைச் சேர்ந்த இளைஞர்கள் காணப் பெற்ருலும் அரசாங்க ஆட்சித் துறையில் உயர் பதவியில் *(I. A. S.)* இவர்களைக் காணுதல் அரிதாய் உள்ளது. அக்குறை நீங்க, உயர்நிலைப் பள்ளிகளில் படிக்கும் நிலையிலே நம் சமூகச் சிறுவர்களிலே பலவாற்ருலும் திறமை உடையாரை இச் சங்கத்தார் தெரிந்து எடுத்து அவர்களுக்கு உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் உயர் பதவிப் போட்டித் தேர்வுகளில் இவர்களை அரசாங்கம் தேர்ந்தெடுத்து அழைக்குமாறு செய்யின், அப்பணி நம் மரபினர் உயர்வுக்கு சிறந்த தொண்டாம்.

கோயம்புத்தூர் நகரத்தார் சங்கம் தன்னுடைய புதிய கட்டிடத்தில் அமர்ந்து, சிறப்புப் பணிகள் பல இயற்றி அணியாய்த் திகழ இறைவன் அருள் புரிய எம்பெருமான் தில்லைக் கூத்தன் திருவடிகளை வணங்குகின்றேன்.

(ஒப்பம்) **எஸ்எம். லட்சுமணன்**

**Dr. SP. ANNAMALAI** M A., M. Litt, Ph.D.
Post-graduate Professor of Tamil,
Thiagarajar College, Madurai 9

"KAYAL"
98, Madurai Housing Unit,
Sathamangalam, MADURAI 20

27-3-74

## வாழ்த்துப்பா

கோவைசேர் நகரத்தார் குலமக்கள் நன்மைக்காய்க் கொள்கை பூண்டு
சேவைசெய மலர்ந்திட்ட சங்கமிருந் துழைத்திடவே செம்மை வாய்ந்த
ஓவியம்போன் றொருமனை தான் வாய்ந்திட்ட துவந்ததிலே ஒன்றுய்க்கூடி
மேவியநம் குலம்வளர நலம்வளரப் பணிசெய்து மேன்மை கொள்வோம்.

அன்புள்ள

(ஒப்பம்) சுப. அண்ணமலை

''தமிழ்க்கடல்'', ''சிவமணி''
''சிவம் பெருக்கும் சீலர்''

ராய. சொக்கலிங்கன்

காரைக்குடி-623001
இராமனுதபுரம் மாவட்டம்

28—3—1974

அன்புடையீர்,

தங்கள் மடல் கிடைத்தது. தாங்கள் சங்கத்திற்கு, கட்டிடம் கட்டித் திறப்பு விழா நடத்துவது பற்றியும் விழாவில் மலர் வெளியிடுவது குறித்தும் மிக்க மகிழ்ச்சி. கட்டிடம் நன்கு முடிவு பெற்று, திறப்பு விழா நன்கு சிறப்புற நடைபெறவும் மலர் பொலிவு பெற்று விளங்கவும் நகரத்தார் சங்கம் கடமையை நிறைவேற்றி பல நற்செயல்கள் புரியவும் எல்லாம் வல்ல இறைவன் அருள்வாளுக!

(ஒப்பம்) ராய. சொக்கலிங்கன்

## செயற்குழு உறுப்பினர்கள்



RM. ரெங்கனாதன் செட்டியார்



L. சண்முகம் செட்டியார்



SV. N. நாகப்பன்
(செயற்குழு & கட்டிடக் குழு உறுப்பினர்)



SM. R. முருகப்ப செட்டியார்



KR. ஆண்டியப்ப செட்டியார்
(செயற்குழு & கட்டிடக் குழு உறுப்பினர்)



SST. சிதம்பரம் செட்டியார்



ஆலை அதிபர்
உயர்திரு L. அழகுசுந்தரம் செட்டியார்
நம் சங்கக் கட்டிடத் திறப்பு விழாவிற்கு
தலைமை தாங்குகிறார்கள்.



கவியரசு கண்ணதாசன்

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞர்.
வெள்ளி விழா கொண்டாடும் வெற்றி வேந்தர்.
நமது கட்டிடத் திறப்புவிழா சிறப்புமலரை வெளியிடுகிறார்.

# நகரத்தார், சிகரத்தார்

பண்டை வாணிபப் பசுமைப் பரம்பரை
பழைமை இலக்கியம் பாராட்டும் தலைமுறை
அறவிலை வாணிபம் அகவிருந் தோம்பல்
திருமண முறையில் செந்தமிழ்ப் பாங்கு
கோவில் கல்லூரி கொடுத்தநற் சிறப்பு
யாவும் நிறைந்த அற்புதக் குலத்தவர்
கண்ணகி என்னும் கண்ணுத் தாள்இவர்
புண்ணிய குலத்தில் பூத்த மணமலர்
எண்ணத் தொலையா எத்தனை கோடிகள்
அள்ளிக் கொடுத்தனர்; அறத்தினை வளர்த்தனர்!
நகரத் தாரெனில் நாட்டிலும் நகரிலும்
சிகரத் தாரெனச் செந்தமிழ் உரைக்கும்
கோவை நகரில் குவிந்தஇக் குலத்தார்
சேவைக் கென்றே செய்தனர் மாளிகை
செய்த மாளிகைத் திறப்பு விழாவில்
கூடும் அனைவரும் குற்றென வாழ்க!
நாளொரு அறமும் பொழுதொரு திறமும்
நகரத் தார்பெற நாயகன் அருள்க!

கண்ணதாசன்
6.1.74

# மலர்க்குழு உறுப்பினர்கள்



S. தியாகராஜன்
(மலர்க்குழுத் தலைவர்,
செயற்குழு உறுப்பினர்)



S. அண்ணாமலை
(செயற்குழு & மலர்க்குழு உறுப்பினர்)



S. அழகப்பன்



ஆர். எல். சாத்தப்பன்
(மலரின் பதிப்பாசிரியர்)

# அடிக்கல் நாட்டு விழா









நகரத்தார் சங்கத்தின் தற்போதைய கட்டிடத்திற்கு 10—9—72 அன்று
அடிக்கல் நாட்டும்போது எடுக்கப்பட்ட காட்சிகள்

# கோவை நகரத்தார் சங்கம் வரலாறும் - வளர்ச்சியும்

SM. ரெங்கனுதன்

பொதுச் செயலாளர், நகரத்தார் சங்கம், கோவை.

கோவை நகரில் நம்மவர்களுக்கு என்று 'நகரத்தார் தர்மநிதி' என்ற பெயரில் ஒரு தனி அமைப்பு பல ஆண்டுகட்கு முன்பே தொடங்கப்பெற்று இன்றும் அது சிறப்பாகச் செயல்பட்டு வருவது அனைவரும் அறிந்த தொன்ருகும். இந்த அமைப்பின் தலையாய பணி, பேரூர் பட்டீஸ்வரப் பெருமான் திருவிழாக் களின்போது ஆண்டுக்கு மூன்று முறை, நமது இனத்தார் சார்பாக இறைவனுக்கு அபிசேக ஆராதனை செய்விப்பதுடன் நமது மடத்தில் எல்லோரும் கூடி உணவருந்தும் வாய்ப்பும் அளிப்பதாகும். இதேபோன்று ஒருமுறை — ஏறத் தாழப் பத்தாண்டுகளுக்கு முன்னர்—பேரூர் விழா அழைப்பினை நகரத்தார்களுக்கு அனுப்பும்போது, அன்றைய தர்மநிதிவிசாரணைதாரர்களான நமது பெருமதிப்பிற் குரிய திரு SV. N. நாகப்ப செட்டியார் அவர்களும் திரு RM. லெட்சுமணன் செட்டி யார் அவர்களும் பின்குறிப்பாக ஒரு செய்தியினை வெளியிட்டிருந்தார்கள். நம்மவர்கள் இறைத் தொண்டுடன் கூட சமூக வளர்ச்சியும் மேன்மையும் கருதிச் செயல்பட தனி ஒரு அமைப்பு இருந்தால் நல்லது என்ற எண்ணத்தினை யும் அதுகுறித்து ஆலோசிக்க விரைவில் கூடுவது என்றும் குறிப்பிட்டிருந் தார்கள். அந்தக்குறிப்புத்தான் நமது சங்கம் தோன்றுவதற்கு வித்தாக இருந்தது.

**முதல் தலைவர் :**

கோவையில் நம் இனத்தாருக்கு ஒரு பெரும் தூணுக — பாலமாக — தந்தையாக விளங்கியவர்கள் பெருமதிப்பிற்குரிய பெருந்தகை உயர்திரு. அரு. லெ.வெ. நடராசன் செட்டியாரவர்கள். அவர்களது சொந்த ஊரான தேவ கோட்டை நகரில் அவர்களைத் ''தெற்கு வீட்டு நானு'' என்று பெருமையுடனும் அன்புடனும் அழைப்பார்கள். சங்கத்திற்குத் தலைவராக யாரைத் தேர்ந்தெடுப் பது என்ற எண்ணத்திற்கே இடமளிக்காமல் நேரே 'ந' அவர்கள் இல்லத்திற்குச் சென்று அவர்கள்தான் தலைவர் என்ற முடிவான கருத்தினைக் கூறினேம். வய திலும், தொண்டு உள்ளத்திலும், அனுபவத்திலும் உயர்ந்த திரு 'ந' அவர்கள் எவ்வித மறுப்பும் சொல்லாமல் உடனே ஒப்புக்கொண்டார்கள்.

சங்கத்தின் முதல் செயற்குழுக்கூட்டம் குரோதி ஆண்டு புரட்டாசித் திங்கள் 18-ம் நாள் (4—10—1964) அன்று தலைவர் திரு அரு. லெ. வெ. ந. அவர்கள் இல்லத்திலேயே நிகழ்ந்தது. அவ்வாறு அக்கூட்டம் அவரது இல்லத்தில்

நிகழ்ந்ததில் வியப்பிற்கிடமில்லை. ஏனெனில் நம்மவர்கள் பொதுநலம் குறித்த எல்லாப் பொது நிகழ்ச்சிகளுக்கும் அவர்கள் இல்லம்தான் தாயகமாக விளங்கியது. அவர்கள் இறைவன் திருவடி நீழலை அடையும்வரை ஒவ்வொரு ஆண்டும் 'தர்ம நிதி' பேரவைக்கூட்டம் அவர்கள் இல்லத்தில்தான் நிகழும். அவர்களது அன்பான ஆசி பெற்றுப் புதிய விசாரணைதாரர்கள் பொறுப்பேற்பர். நமது சங்கத்திற்கும் பல்லாண்டுகள் அருந்தலைவராக விளங்கி வழிகாட்டினார்கள்.

**முதல் செயற்குழு:**

நமது சங்கம் 1964-ம் ஆண்டு அக்டோபர் திங்கள் 20-ம் தேதியன்று கோவை பதிவாளர் அலுவலகத்தில் பதிவு செய்யப்பெற்றது. இச்சங்கத்தினை நிருவகிக்க நியமிக்கப்பெற்ற முதல் செயற்குழு:—

திரு. அரு. லெ. வெ. நடராசன் செட்டியார் ... தலைவர்

திரு. P. S. S. சோமசுந்தரம் செட்டியார் ... உபதலைவர்

திரு. PL. S. RM. இராமனுதன் செட்டியார் ... உபதலைவர்

திரு. AL. சிங்காரம் செடடியார் ... பொதுச் செயலாளர்

திரு. NK. நாகப்ப செட்டியார் ... நிர்வாகச் செயலாளர்

திரு. SM. ரெங்கனுதன் செட்டியார் ... பொருளாளர்

திரு. AL. மாணிக்கம் செட்டியார் ... செயற்குழு உறுப்பினர்

திரு. P. சுப்பிரமணியன் செட்டியார் ... ,,

திரு. SM. KR. கருப்பன் செட்டியார் ... ,,

திரு. KR. ஆண்டியப்ப செட்டியார் ... ,,

திரு. AN. வெங்கிடாசலம் செட்டியார் ... ,,

திரு. PL. K. குப்பான் செட்டியார் ... ,,

திரு. T. S. தியாகராசன் செட்டியார் ... ,,

திரு. K. கண்ணப்ப செட்டியார் ... ,,

திரு. RM. லெட்சுமணன் ... ,,

திரு. SVN. நாகப்பன் ... ,,

**துவக்க விழா :**

ஆர்வமிக்க இச் செயற்குழுவினர் ஆற்றிய பணியினை நாம் மறக்க இயலாது. 1965-ம் ஆண்டு மார்ச் திங்கள் 17ம் நாள் நமது சங்கம், செட்டி நாட்டு அரசர் பெருந்தகை ராஜாசர் மு. அ. முத்தையா செட்டியார்அவர்களால் முறைப்படி துவக்கி வைக்கப்பெற்றது. கலைத்தந்தை கருமுத்து தியாகராசன் செட்டியார் அவர்கள் தலைமையில், தொழிலதிபர் அ.மு.மு. முருகப்ப செட்டியார் அவர்களும், சென்னை நகரத்தார் சங்கத் தலைவர் திரு சோமசுந்தரம் செட்டியார் அவர்களும் சிறப்புரையாற்ற துவக்கவிழா இனிது நிகழ்ந்தது.

**முதற்பணி :**

நமது சங்கம் துவங்கிய அன்றே ஒரு மாபெரும் பொதுப்பணியினைச் செய்தது. பல ஊர்களிலுமுள்ள நகரத்தார் சங்கங்களின் முதல் மாநில மாநாட்டைச் சென்னையில் கூட்டுவதற்கு முன்னோடியாக, இதர நகரத்தார் சங்கங்களின் முதல் மாநில மாநாட்டைச் சென்னையில் கூட்டுவதற்கு முன்னோடி யாக, இதர நகரத்தார் சங்கங்களின் பிரதிநிதிகளைக் கோவையில் கூடச் செய்து வழிமுறைகள் வகுக்கத் துணை நின்று பெருமை பெற்றது.

**இடம் வாங்குதல் :**

1967-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 3-ஆம் நாள் நிகழ்ந்த செயற்குழுக் கூட்டத்தில் நமது சங்கத்திற்கெனத் தனியாக இடம் வாங்கத் தீர்மானிக்கப்பட்டு கீழ்க்கண்ட செயற்குழுவினர் நியமிக்கப்பெற்றூர்கள்.

திரு. NK. நாகப்ப செட்டியார்
திரு. SVN. நாகப்பன்
திரு. KR. ஆண்டியப்ப செட்டியார்
திரு. SM. ரெங்கனுதன்
திரு. SM. KR. கருப்பன் செட்டியார்
திரு. PL. S. RM. சிவனடியான் செட்டியார்

மேற்கண்ட குழுவினராலும் — சிறப்பாக SVN, NKN என அன்புடன் அழைக்கப்படும் இரு நாகப்பர்களின் பெருமுயற்சியின் பயனுலும் 1968-ம் ஆண்டு மே மாதம் 16-ஆம் நாள் ஆர். எஸ். புரம் கௌலி பிரவுன் ரோட்டில் ரூ. 30,400-00 க்கு இடம் வாங்கி கிரயம் செய்யப்பட்டது. இடம் வாங்குவதற் குக் கீழ்க்கண்ட பெருமக்கள் தக்க சமயதத்தில் கடனுதவியும் உழைப்பும் நல்கிய மகத்தான பணியினை நமது சங்கம் என்றும் மறக்க இயலாது.

SM. KR. கருப்பன் செட்டியார்
PL. S. RM. இராமனுதன் செட்டியார்
KR. ஆண்டியப்ப செட்டியார்
NK. நாகப்ப செட்டியார்
SVN. நாகப்ப செட்டியார்
SST. சிதம்பரம் செட்டியார்
SM. ரெங்கனுதன் செட்டியார்

**பணிகள் :**

நமது சங்கம் கடந்த பத்து ஆண்டுகளில் தன்னாலியன்ற தொண்டுகளை ஆற்றியுள்ளது. அவற்றில் சிலவற்றையாவது இங்கு குறிப்பிட வேண்டியது அவசியம். இனத் தொண்டுடன் நில்லாமல் தமிழகத்தில் புயலின் சீற்றம் காரணமாகத் துயருற்றோருக்கு நிவாரண நிதியளித்து நாட்டுத் தொண்டாற்றிப் பெருமை கொண்டது.

அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆலயம் பதினாயிரம் நாட்டல்
அன்ன யாவினும் புண்ணியம் கோடி
ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்

என்ற பாரதியின் பாடலுக்கேற்ப கல்விக்கும் நிதியளித்து சமூகத் தொண்டாற்றி நமது சங்கம் புகழ் கொண்டது.

நகரத்தார் ஐக்கிய சங்கத்தின் வேண்டுகோளுக்கு இணங்கி நகரத்தார் புள்ளி விவரங்களை நமது சங்கம் சேகரித்துக் கொடுத்தது. நம் சங்கத்தின் சார்பில் இதற்காக திரு. SVN. அவர்களும் திரு. NKN. அவர்களும் பெரும்பங்கு எடுத்துக்கொண்டதனை நாம் நினைவில் கொள்வோம்.

மணிவிழாக் கண்ட நமது புரவலர் ராஜாசர் மு. அ. முத்தையா செட்டியார் — ராணி மெய்யம்மை ஆச்சி தம்பதியினருக்கும், சென்னை ஷெரிபாகப் பதவி ஏற்ற உயர்திரு. MAM. ராமசாமி அவர்களுக்கும் பாராட்டு விழா நடத்திச் சிறப்புக் கொண்டது. மணிவிழாப் பாராட்டுக் கூட்டத்தில் செட்டி நாட்டரசர் மன நிறைவுடன் நமது சங்கத்திற்கு ரூ. 25,000- நன்கொடை தருவதாக வாக்களித்துப் பெருமை பெற்றது நம் நினைவில் நிற்கும் நிகழ்ச்சியாகும்.

**கட்டிடம் :**

1972-ஆம் ஆண்டிற்குப் பிறகு, வாங்கிய இடத்தில் கட்டிடம் கட்டுவதற்கான முயற்சி வலுப்பெற்றது. நமது நிருவாகச் செயலாளர் திரு. L. சோமு அவர்களின் தளர்வற்ற உழைப்பையும், தன்னலமற்ற சேவையையும் தாராள மனப்பாங்கையும் சங்கம் என்றும் நன்றியுடன் நினைவில் கொள்ளும். ஏனைய செயற்குழு உறுப்பினர்களின் ஒத்துழைப்பினாலும், அனைத்திற்கும் மேலாக பேரூர் கூத்தபிரான் திருவருளாலும் நமது சங்கக் கட்டிடம் உருவாகித் திகழ்கிறது.

நமது சங்கத்தினைத் துவக்கி வைத்த பெருந்தகை செட்டிநாட்டரசர் டாக்டர் ராஜா சர் மு. அ. முத்தையா செட்டியார் அவர்களே, இன்று நமது சங்கக் கட்டிடத்தினையும் துவக்கவிருப்பது பெருமகிழ்ச்சிக்குரியதாகும். அவர்களது கைராசியால் நமது சங்கம் மென்மேலும் வளர்ந்து சிறப்புற்றுத் திகழும் என்பதில் ஐயமில்லை. நகரத்தார் சங்கம் பன்னெடுங்காலம் சிறப்பாகப் பணியாற்ற இறைவன் அருள்புரிவானாக.

# நகரத்தார் வாழ்த்து

## திருவைந்தெழுத்துப் பதிகம்

நேமம் நகரின் கண் 'ஜெயங் கொண்டார் சதகம்' அரங்கேற்றப் பட்டபோது நகரத்தாரின் விருப்பத்திற்கிணங்க பாடுவார் முத்தப்ப செட்டியாரால் பாடப்பெற்றது இப்பதிகம். திரு ஐந்தெழுத்து என்பது 'நமசிவாய' ஆகும். பின்வரும் பாட்டுகளின் முதல் எழுத்தினை இணைத்துப் பார்த்திடின் அது புலப்படும்.

1 **ந**ன்றே பெருக! நவிலுங் குபேர நகர் வணிகர்
என்றேயுலகம் புகழ அவர்க் கீண்டிருநிதியம்
நின்றேநிலவ! அறமும் கனமும் நெடிதுபெறத்
தொன்றே சோளீசர் செயல்கொண்டார் பாதம் துதிக்குதுமே!

2 **ம**ன்னும்பெருமை பெருகிக் குபேரநகர் வணிகர்
என்னும் மகிமையுறவும் வறியவர்க் கீந்திடவும்
பொன்னும் பொருளும் புவியும் முப்போகமும் பொருந்திடவும்
துன்னும் சோளீசர் செயங்கொண்டார் பாதம் துதிக்குதுமே!

3 **சி**வனுலயமும் திருமால் பணியும் சிறப்புறத்தான்
நவமாய்ப் புதுக்கியும் ஆக்கியும் மேலோர் நவிலுநல்ல
தவாமி தெனத்தரணி யிலோங்கவும் தாங்குமகத்
துவமா சோளீசர் செயல்கொண்டார் பாதம் துதிக்குதுமே!

4 **வ**ந்தார்க்குதவும் வணிகர் குபேரனும் வளமையர்க்கும்
பிந்தார் தனத்திலிவரே யுலகிற் பெரியரெனச்
சிந்தார்புர மிளையாற்றங் குடியார் சிறப்புறவும்
சொந்தார் சோளீசர் செயல்கொண்டார் பாதம் துதிக்குதுமே!

5 **ய**வனம் கலிங்கம் தமிழ் சிங்களம் யாண்டுமுள்ள
புவனமெலா மிவர்வர்த்தக மோங்கவும் புண்ணியம்சேர்
தவமும் திருவும் தங்க வணிகர் தரம்பெறவும்
துவச சோளீசர் செயங்கொண்டார் பாதம் துதிக்குதுமே!

# அறவுரை அவற்றைத் - - -
# - - - திறனறிந்து ஏற்றல்

சா. கணேசன்

''யாதும் ஊரே! யாவரும் கேளிர்!'' என்று
ஓதிய அருமை உணர்ந்து மகிழ்வம்;
மற்றும்அவ் உறுதி மனம், மொழி, மெய்கள்
பற்றிட யாண்டும் பயனுற வாழ்வம்;
எனினும், எம்ஊர் எம்கேள் என்னும்
நனிதவ உரிமை நழுவிடப் போமோ?

''ஒன்றே குலமும்! ஒருவனே தேவனும்!
என்றே கணித்த எழில்அறம் மறை எனச்
சிந்தையிற் டதித்துத் திகழுவம்; எனினும்,
வந்தநற் குலத்தின் மாண்புறு நல்லறம்
பேணுதல் அதனைப் பிரிந்திடல் தகுமோ?

ஆணினும் பெண்ணினும் அலியினும் மற்றைக்
கண்ணுறு பொருள்எலாம் கவினும் கடவுளை
எண்ணம் மறவா-திருக்க ஏற்றவாறு
ஒருபெயர் ஓதி ஓர்உருக் கண்டு
திருவருள் வேட்டல் தீமையாய் விடுமோ?
அற்றன்று; எனவே,

ஊர்எலாம் நமதுஊர்; உலகுஎலாம் உற்றூர்;
ஓர்குலம் யாவரும்; ஒன்றே கடவுளும்;
எனும்அவ் உண்மை இதயத்து இருத்திக்
கனவினும் தீமை கருதாது எவர்க்கும்,
நன்றே நினைந்து, நன்றே மொழிந்து,
நன்றே புரிந்து, நம்கடன் ஆற்றி,
தம்ஊர், தம்கேள், தம்குலம், தழைக்கத்
தம்உளம் பற்றிய தனிப்பெயர் ஓதி
ஊழிதோ றூழி உலவா
வாழி ஒருவனை வழிபடு வோமே!

# கோயமுத்தூர் நாட்டுக்கோட்டை நகரத்தார் தர்ம நிதி...

(கரு. ஆண்டியப்பன்)

ஆதிபுரி என்றும் மேலைச் சிதம்பரம் என்றும் சிறப்புப் பெயர்கள் பெற்றுள்ள திருப்பேரூரின் கண் கோயில் கொண்டு விளங்கும் பட்டீச்சுரப் பெருமான் பச்சை நாயகி அம்மன் தினசரி வழிபாட்டிற்குப் புஷ்பக் கட்டளை ஏற்படுத்த கோவை நகரத்தார் பெருமக்கள் எண்ணினர். சுமார் நூறு ஆண்டுகட்கு முன்பு கோவையில் லேவாதேவி தொழில் செய்த தேவகோட்டை, நச்சாந்துப் பட்டி நகரத்தார்கள் தங்கள் கடைகளிலிருந்து கிடைத்துவந்த மகமைப் பணத்தைக்கொண்டு பேரூரில் நொய்யலாற்றுக்குச் செல்லும் வழியில் நந்தவனம் ஒன்று ஏற்படுத்தியும் புஷ்பம் கட்டுவதற்கும் தங்குவதற்கும் கட்டிடம் கட்டியும் பெரிய கிணறு வெட்டி பம்புசெட் வைத்தும் பராமரித்து வந்தனர். 1932-ஆம் ஆண்டுவரை இங்கு நந்தவனம் ஓட்டுக்கட்டிடம் ஒன்றுடன் மாத்திரமே இருந்து வந்தது. பின் இவற்றைப் புதுப்பித்து விரிவுபடுத்த எண்ணிய நகரத்தார்கள் ஒன்றுகூடி 1932 ஆம் ஆண்டில் ரூ. 25,000-00 செலவு செய்து தாரிசுக்கட்டிடம் எழுப்பினுர்கள். 1954-ம் ஆண்டில் லேவாதேவிக் கடைகள் குறைந்துவிட்ட படியாலும் கோவையில் நகரத்தார்கள் பல தொழில்களில் விரிவடைந்ததாலும் எல்லோரையும் ஒன்றுகூட்டி நந்தவனப் பராமரிப்பை விரிவுபடுத்தவும் எல்லோரும் சேர்ந்திருக்கவும் எண்ணி அப்போது மேல்பார்வையிட்டுவந்த *PL. S. RM.* குடும்பத்தினர், *AR. L. V.* நடராஜன் செட்டியார், *PL.* கண்ணப்ப செட்டியார், *KM. KM.* குமரப்ப செட்டியார் ஆகியவர்கள் நகரத்தார்களைக் கூட்டி நந்தவனத்தையும் கட்டிடத்தையும் ஆஸ்தியையும் கொடுத்து எல்லோரையும் மெம்பர்களாக்கி வருஷம் இருவர் காரியம் பார்ப்பதாக முடிவு செய்து ஒப்புவித்தார்கள்.

கோவை நகரத்தார்கள் ஆண்டுதோறும் மகாசபை கூட்டி அதில் விசாரணைதாரர்களை தேர்ந்தெடுத்து நடத்தி வருகிறுர்கள். மேலும் அதே ஆண்டில் ரூ. 15,000-00 பொருட்செலவில் கட்டிடச் சுற்றுமதில் சுவர்கள் புதுப்பிக்கப்பட்டது. மடம் பழுதுபார்க்கப்பட்டு மின்விளக்கும், பல அன்பர்கள் பொருளுதவியால் காற்றுடி ஆகிய நவீன வசதிகள் பொருத்தப்பட்டன. பெண்களுக்குத் தனிவளவு குளியலறை ப்ளஷ் அவுட்டுகளும் புதியதாக கட்டப்பட்டன. இவற்றிற்கு நகரத்தார்களில் சிலர் நன்கொடையாகக் கொடுத்தார்கள். போஜனஹால் 1967ஆம் ஆண்டில் ரூ. 25,000-00 செலவிடப்பட்டுப் புதிதாகக் கட்டப்பட்டது.

தொடக்கத்தில் இதன் உறுப்பினர்களாக 17 நகரத்தார் தொழில் ஸ்தாபனங்களே இருந்தனர். இன்று 150 நகரத்தார் தொழில்ஸ்தாபனங்கள் அங்கம் வகிக்கின்றனர். 1954-ஆம் ஆண்டிலிருந்து ஆண்டு சந்தாவாக ரூ. 75 விருந்து 150 வரையில் நிர்ணயிக்கப்பட்டது. இப்பொழுது அந்தச் சந்தா ரூ. 31 முதல் 250 வரை என்று மாற்றி அமைக்கப்பட்டுள்ளது. பெரும்பாலும் தொழில் நிறுவனங்களும் கடைகளுமே உறுப்பினர்களாக இருந்து வருகின்றனர்.

சுயம்பு மூர்த்தியாக விளங்கும் பட்டீஸ்வரர் பச்சை நாயகியம்மன், பரிவார தெய்வங்களுக்கு தினம் சாயரக்ஷைபூஜைக்கு 9 மாலைகள் வழங்குவது இந் நந்தவனத்தின் முக்கியப் பணிகளில் ஒன்ருகும். ஆண்டுதோறும் ஆவணி மாதத்

தில் நிகழும் சதுர்த்தசி அபிஷேகமும், மார்கழித் திருவாதிரை அன்று ஆருத்ரா தரிசன வைபவம் இவற்றை நடத்தி வைத்தல் இந்நிதியின் மற்ற பணிகளாகும். மேலும் பங்குனியில் நடைபெறும் பங்குனி உத்திரப் பெருவிழாவில் தெப்ப உற்சவம் இந்நிதியிலிருந்து சிறப்பான முறையில் நடத்தி வைக்கப்படுகின்றது. அன்றைய தினம் சுவாமி எழுந்தருளச் செய்யப்பட்டு நமது மடத்திற்கு அழைத்துவந்து நம்மிடத்தில் அபிஷேக ஆராதனை மண்டகப்படி செய்யப்படுகிறது. இவ்விழாவிற்கு கோவை நகரத்தார்களும் மற்றும் வெளியூர் நகரத்தார்களும் குடும்பத்துடன் வந்து கண்டுகளித்து செல்கின்றார்கள். வருபவர்களை அன்புடன் வரவேற்று இங்கு விருந்தளிக்கப்படுகிறது.

மார்கழித் திங்களில் வரும் பிள்ளையார் நோன்புக்கு ஆவரம்பூ இங்கிருந்துதான் நகரத்தார்களுக்கு விநியோகிக்கப்படுகிறது. முதலில் வீடு வீடாக விநியோகிக்கப்பட்டது. பின் நகரில் தேவகோட்டை அரு. லெ.வெ.ந. அவர்கள் வீட்டிலிருந்தும் இந்நாளில் நச்சாந்துப்பட்டி பழ. சி. ராம. இல்லத்திலிருந்தும் இவை விநியோகிக்கப்பட்டு வருகின்றன.

மேற்கண்ட இறைத்தொண்டுகள் ஆற்ற ஆண்டுதோறும் ஏற்படும் செலவு ரூ. 9,000-த்தை எட்டியுள்ளது. ரூ. 12,000-த்தை எட்டிவிடும். இதற்கு வருமானம், ஆண்டுச் சந்தா, பங்குனி உத்திரப் பெருவிழாவன்று நடைபெறும் ஏலத்தில் கிடைக்கும் ஏலத்தொகை, தேங்காய், வாழை, ஆகியன விற்று வரும் தொகை மற்றும் டெபாசிட் செய்துள்ள பணத்தின் மீதான வட்டி இவற்றிலிருந்து சுமார் 16,000-ரூபாய் கிடைத்து வருகிறது.

கோவை நகரத்தார் சங்கக் கட்டிட நிதிக்கு நன்கொடையாக ரூ. 5,000-இவ்வாண்டு வழங்கப்பட்டுள்ளது.

இத்தர்ம நிதியின் வளர்ச்சிக்காக கமிட்டி மெம்பர்களும் விசாரணைதாரர்களும் பொருளாளர்களும் ஆண்டுதோறும் அரும்பாடுபட்டு ஆர்வத்துடன் பணியாற்றி வருகிறார்கள். குறிப்பாக இதன் வளர்ச்சிக்குப் பாடுபட்ட அரு.லெ. வெ. நடராஜன் செட்டியார், கும. கும. குமரப்ப செட்டியார், *PL. S. RM.* குடும்பத்தினர், *PL.* கண்ணப்ப செட்டியார், கே. எல். பி. சுப்பிரமணியம் செட்டியார், *N. K. N.* நாகப்ப செட்டியார், *K.* ராமனுதன் செட்டியார், *K. R.* ஆண்டியப்பச் செட்டியார், *AL.* சிங்காரம் செட்டியார், *A. L.* சண்முகம் செட்டியார், *SM.* ரெங்கனுதன் செட்டியார் ஆகியோர் பணி பாராட்டுக்குரியது.

நூறு ஆண்டுகளுக்கு முன் தொடங்கப்பெற்று நடந்து வருகிற இந்தப் பணி இன்னும் பல நூறு ஆண்டுகள் நடக்கக்கூடிய முறையில் திட்டங்கள் வகுக்கப்பட்டு செயல்படுத்தப்படுகிறது. இதன் பணி முக்கியமாக தெய்வ வழிபாடுதான்.

இதனல் இங்கு கூடிய நகரத்தார்கள் இன்றைய மாறுபாடுகளுக்கு தகுந்தமாதிரி அமைப்பு ஒன்று தேவையெனக் கருதி முடிவெடுத்து கோவையில் நகரத்தார் சங்கம் நிறுவத் திட்டம் வகுத்து அதை செயல்படுத்தி வருகிறார்கள்.

நகரத்தார் சங்கத்தின் முக்கியப் பணி (தெய்வ வழிபாடுகளை கவனிக்கநகரத்தார் தர்மநிதி இருப்பதால் இதுதவிர) சமூக சேவை, படிப்பு, மற்றும் கோவை வாழ் நகரத்தார்களுக்கு வேண்டிய அமைப்புக்கு உதவி புரிதலாக இருக்கும்.

இதன் விவரங்களை *SM.* ரெங்கனுதன் செட்டியாரவர்கள் தனியாகத் தந்துள்ளார்கள்.

# கட்டிடக்குழு உறுப்பினர்கள்



SP. இராமசாமி
(செயற்குழு & கட்டிடக்குழு உறுப்பினர்)



SM. நாகப்பன்
(செயற்குழு & கட்டிடக்குழு உறுப்பினர்)



SE. SV. நாராயணன்
(செயற்குழு & கட்டிடக்குழு உறுப்பி



C. இலட்சுமணன்
(செயற்குழு & மலர்க்குழு உறுப்பினர்)



AN. வெங்கிடாசலம்

# சங்கத் துவக்க விழா





## மூவேந்தர்கள்

17—3—1965 அன்று கோவை நகரத்தார் சங்க துவக்க விழாவில்
செட்டிநாட்டரசர் ராஜாசர் மு. அ. முத்தையா செட்டியார்
ஆலை அரசர் கருமுத்து தியாகராசன் செட்டியார்
தொழில் அரசர் அ. மு. மு. முருகப்ப செட்டியார்
ஆகிய மூவரும் ஒருங்கிணைந்த அரிய காட்சி

## இத்தர்ம ஸ்தாபனத்திற்கு 1954 ம் ஆண்டு முதல் இருந்து வந்த விசாரணைதாரர்கள், பொருளாளர்கள் பெயர்கள் பின்வருமாறு

**3-3—54 முதல் 9—3—57 முடிய**

| | |
|---|---|
| PL. கண்ணப்ப செட்டியார் | தேவகோட்டை |
| KM.KM. குமரப்ப செட்டியார் | நச்சாந்துபட்டி |
| KM.S.S. சுப்பிரமணியம் செட்டியார் | வலையபட்டி |
| K.L.P. சுப்பிரமணியம் செட்டியார் | நச்சாந்துபட்டி |
| A. முத்தையா செட்டியார் (பொருளாளர்) | தேவகோட்டை |

**10—3—57 முதல் 28—3—58 முடிய**

| | |
|---|---|
| K. ராமனுதன் செட்டியார் | வலையபட்டி |
| NK. நாகப்ப செட்டியார் | அலவாக்கோட்டை |
| L. சண்முகம் செட்டியார் (பொருளாளர்) | ஓ. சிறுவயல் |

**29—3—58 முதல் 17—3—59 முடிய**

| | |
|---|---|
| NK. நாகப்ப செட்டியார் | அலவாக்கோட்டை |
| KL.P. சுப்பிரமணியம் செட்டியார் | நச்சாந்துபட்டி |
| L. சண்முகம் செட்டியார் (பொருளாளர்) | ஓ. சிறுவயல் |

**18—3—59 முதல் 21—4—60 முடிய**

| | |
|---|---|
| KR. ஆண்டியப்ப செட்டியார் | வேந்தன்பட்டி |
| NK. அருணசலம் செட்டியார் | நாச்சியாபுரம் |
| MK.MS. விசுவநாதன் செட்டியார் (பொருளாளர்) | வலையபட்டி |

**22—4—60 முதல் 23—4—61 முடிய**

| | |
|---|---|
| A.MM. FIRM | கோயமுத்தூர் |
| KM.SS. ராமசாமி செட்டியார் | வலையபட்டி |
| PL.K. குப்பான் செட்டியார் (பொருளாளர்) | வலையபட்டி |

**24—4—61 முதல் 13—5—62 முடிய**

| | |
|---|---|
| M.KM.S. விசுவநாதன் செட்டியார் | வலையப்பட்டி |
| MA. சிங்காரம் செட்டியார் | நச்சாந்துபட்டி |
| PL.K. குப்பான் செட்டியார் (பொருளாளர்) | வலையபட்டி |

**14—5—62 முதல் 16—6—63 முடிய**

| | |
|---|---|
| S.ST. சிதம்பரம் செட்டிமார் | வலையபட்டி |
| AL. சிங்காரம் செட்டியார் | கண்டவராயன்பட்டி |
| PL.K. குப்பான் செட்டியார் (பொருளாளர்) | வலையபட்டி |

**17—6—63 முதல் 2—5—64 முடிய**

| | |
|---|---|
| AL. சிங்காரம் செட்டியார் | கண்டவராயன்பட்டி |
| RM. லெட்சுமணன் செட்டியார் | கண்டவராயன்பட்டி |
| PL.K. குப்பான் செட்டியார் (பொருளாளர்) | வலையபட்டி |

**3—5—64 முதல் 1—5—65 முடிய**

| | |
|---|---|
| RM. லெட்சுமணன் செட்டியார் | கண்டவராயன்பட்டி |
| SV.N. நாகப்ப செட்டியார் | நாச்சியாபுரம் |

பொருளாளர் இல்லை

**2—5—65 முதல் 30—7—66 முடிய**

| | |
|---|---|
| SV.N. நாகப்ப செட்டியார் | நாச்சியாபுரம் |
| SM.KR. கருப்பன் செட்டியார் | கீழச்சிவல்பட்டி |

**31—7—66 முதல் 17—6—67 முடிய**

| | |
|---|---|
| SM.KR. கருப்பன் செட்டியார் | கீழச்சிவல்பட்டி |
| SM. ரெங்கனுதன் செட்டியார் | சிறுவயல் |

**18—6—67 முதல் 15—5—68 முடிய**

| | |
|---|---|
| SM. ரெங்கனுதன் செட்டியார் | சிறுவயல் |
| RM. ரெங்கனுதன் செஞ்டியார் | கருங்குளம் |

(இவ்வாண்டில்தான் போஜன ஹால் கட்டப்பட்டது)

**16—5—68 முதல் 27—4—69 முடிய**

| | |
|---|---|
| RM. ரெங்கனாதன் செட்டியார் | கருங்குளம் |
| AT. சிங்காரம் செட்டியார் | கண்டவராயன்பட்டி |

**28—4—69 முதல் 25—4—70 முடிய**

| | |
|---|---|
| AT. சிங்காரம் செட்டியார் | கண்டவராயன்பட்டி |
| S.SA. ராமனாதன் செட்டியார் | ராயவரம் |

**26—4—70 முதல் 8—5—71 முடிய**

| | |
|---|---|
| S.SA. ராமனாதன் செட்டியார் | ராயவரம் |
| SP. ராமசாமி செட்டியார் | கண்டரமாணிக்கம் |

**9—5—71 முதல் 10—6—72 முடிய**

| | |
|---|---|
| SP. ராமசாமி செட்டியார் | கண்டரமாணிக்கம் |
| L. சோமு செட்டியார் | நச்சாந்துபட்டி |

**11—6—72 முதல் 30—6—73 முடிய**

| | |
|---|---|
| L. சோமு செட்டியார் | நச்சாந்துபட்டி |
| PK.N.NKN. நாகப்ப செட்டியார் | கடியாபட்டி |

**1—7—73 முதல் 13—7—74 முடிய**

| | |
|---|---|
| PK.N.NKN. நாகப்ப செட்டியார் | கடியாபட்டி |
| SP. மணி செட்டியார் | வலையபட்டி |

**14—7—74 முதல்**

| | |
|---|---|
| SP. மணி செட்டியார் | வலையபட்டி |
| SP. செயங்கொண்டான், செட்டியார் | உலகம்பட்டி |

# ஓ! என் நகரத்து மாந்தர்களே!

(வயி. இராமநாதன், செட்டியார் & கம்பெனி, கோவை)

நகரத்தார் பல்லோர் வாழ்வு
நரகத்துக் கீடாய்க் காணும்!
சிகரத்தில் வாழ்ந்த செல்வர்
சிதறுண்டு கெட்டோம் இன்று!
பகரொணுத் துன்பம் பெற்ருேம்!
பரந்தாமன் கருணை இன்றி
நகரத்து வாழ்ந்த மாந்தர்
நகரத்தா ராக இல்லை!

பார்சிறந் தோங்கி வாழப்
பள்ளிகள் ஆல யங்கள்
ஊர்சிறந் தோங்கக் கட்டி
உயர்த்திஞேம்! உயர்வு கண்டோம்!
தாரென மணங்கொ டுத்தோம்!
சருகென ஆஞேம்! இன்று
சீர்சிறப் பெல்லாம் எங்கே?
செல்வங்கள் போன தெங்கே?

நினைப்பெல்லாம் பழங்கா லத்தை!
நிகழ்வதை உணர்வ தில்லை!
முனைப்பிலை! முனைப்பே இல்லை!
முன்னேறும் எண்ணம் இல்லை!
கணப்பொழு தேனும் சும்மா
கைகட்டி இருந்தி டாமல்
முனைப்பொடு செயல்பு ரிந்தால்
முன்னேற்றப் பாதை காண்போம்!

மீண்டும்நாம் வாழ்வோம்! என்றும்
மேன்மையே பெறுவோம்! தத்தம்
வேண்டாத செல வொடுக்கி
விரிவினை தவிர்ப்போம்! நாங்கள்
தீண்டாத தொழிலே இல்லை
எனும்படி உழைப்போம்! வெல்வோம்!
மீண்டும்நாம் வாழ்வோம்! என்றும்
மேன்மையே பெறுவோம் வாரீர்!

# கண்டி

திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கள்

தென்பாண்டி நாட்டின் தலைநகரம் மதுரையம்பதி. ஆண்டவன் அறுபத்தி நான்கு திருவிளையாடல்கள் புரிந்த அரிய திருத்தலம்.

இம்மதுரைக்கு அருகில் திருப்பூவணம் என்னும் அருமைப்பதி ஒன்று உண்டு. அருமையான இச்சிவதலத்தில் ஆன்றோர்கள் பலர் வாழ்ந்தார்கள். அன்றியும் கணிகையர் பலர் பெரும் சிறப்புடன் வாழ்ந்தார்கள். ஆடல் பாடல் களில் வல்லவர்களாயும், செல்வமும், சீரும் பொருந்தியவர்களாயும் இரதியும், இலக்குமியும் நாணுகின்ற பேரழகு படைத்தவர்களாயும் அவர்கள் விளங்கினார்கள்.

உடுக்குலங்களுக்கு இடையே ஒரு பூரண மதி விளங்குவதுபோல், அந்தப் பொதுமகளிர்களாகிய நட்சத்திரங்களுக்கு நடுவில் கண்டி என்ற மாதரசி முழுமதியைப்போல் ஒளி செய்தாள். நிறைந்த கட்டழகுடையவள். இன்னிசை யில் சமானமில்லாதவள் அன்றியும் அவள்பால் போதுமான பொருள் வளமும் இருந்தது.

இத்தகைய கண்டி சிவபெருமானுடைய திருவடியை இடையறாது சிந்திக்கும் திருவுடையவள். திரு ஐந்தெழுத்தை தப்பாது எப்போதும் உச்சரிப்பவள். அதிகாலையில் எழுந்திருப்பாள். எழுந்திருக்கும்போதே சோமசுந்தரம் சோமசுந்தரம் என்று உள்ளம் உருகி உரைப்பாள். நீராடியபின் நீறுடி மலர் கொய்வாள். மாலை தொடுப்பாள். ஆலயத்திற்குச் சென்று தொழுவாள். கோயிலைக் கூட்டுவாள். மெழுகுவாள். கோலம் புனைவாள். மாலை சூட்டச் செய்து கும்பாலத்தி எடுத்து இனிது உள்ளம் உருகி, கண்ணீர் பெருகிவரப் பாடுவாள். பக்திப் பரவசத்துடன் கோயில் தொண்டுகளைப் புரிவாள். உச்சி நேரம் வந்ததும் வீடு வந்து உண்டு இளைப்பாறுவாள். மாலையில் மீளவும் நீராடி திருவெண்ணீறு புனைந்து ஆலயம் போய் வழிபாடு செய்வாள். அவள் வீதியில் போவது அழகுத் தெய்வம் அன்புப் பணிபூண்டு மானுடவுருவுடன் போவது போன்றிருந்தது. இறைவனை எண்ணும் போதெல்லாம் அவளுடைய கண்களில் ஆறுபோல் நீர் ஊற்றெடுத்து ஓடும். அன்புக் கடலாகிய அவளுடைய மனம் உலகப்பற்று அற்று அருள் நாட்டம் ஒன்றிலேயே நிலைத்திருந்தது.

''இறைவனே! கயிலைமேவும் கண்ணுதற் கடவுளே! ஆலவாயண்ணலே! அருட்பெருங் கடலே! பிறவியாகிய இருட் கடலினின்றும் என்னைக் கரையேற்றி விப்பாய்; என்னப்பனே! என்ன பாவஞ் செய்தேனோ? இப் பொதுமகளிர் குலத்திற் பிறந்தேன். தேவ தேவா! தீனதயாளா! இனி எனக்குப் பிறவியைக் கொடுக்க வேண்டாம். சுவாமி! எண்ணில் கோடி யுகங்களாகப் பிறப்பதும் இறப்பதுமாக அலைந்து அலைந்து இளைத்து விட்டேன். எம்பெருமானே! இனி இப்

புன்புலால் உடம்பில் இருந்து இடர்படுந் துயரை ஆற்றகில்லேன், என்னை யாண்டருள்வது உன் கடன்'' என்று இறைவனை நோக்கி முறையிட்டு அழுவாள்; தொழுவாள்.

இங்ஙனம் பக்தி நெறிநின்ற கண்டி என்பாள் சிவனடியார்களைக் கண்டால் தாயைக் கண்ட இளஞ் சேய்போல் உள்ளங் குழைந்து உருகி, அவர்களைப் பலகாலும் பணிவாள். அவர்கட்கு உண்டி உடை பொன் முதலியன உதவி உபசரிப்பாள்.

கணிகையர் குல முறைப்படி பொருள் தந்தவர் எவரேயாயினும் விரும் பாதபடி சிவனடியார் யாரேனும் விரும்பினால் அவர்கள் தரும் பொருள் அணு வளவேயானாலும் மலையளவாக நினைத்து அந்த அடியார்க்குத் தன் உடம்பை அர்ப்பணம் புரிவாள். தன் உடல் பொருள் உயிர் அனைத்தும் சிவனடியார்க்கு உரியவையென்று கருதி வாழ்ந்து வந்தாள். ''என் கொங்கை நின் அன்பர் அல்லார் தோள் சேரற்க'' என்ற திருவாக்குக்கு இலக்காக நின்றாள்.

எப்போதும் அவள் வீட்டில் பரதேசிகளும் பக்தர்களும் கூட்டம் போட் டிருப்பார்கள். தினம் இருபது முப்பது பேர்கள் சாப்பிட்ட வண்ணமாகவே இருப்பார்கள். இதற்கு ஏற்ப அவளுக்கு வருவாய் வருவதில்லை. ஏழை சந் யாசிகள் யாதாமொருவர் அற்பத் தொகை தருவார்கள். அதனைப் பெருந் தொகையாக நினைத்து மகிழ்ச்சியுறுவாள்.

இவ்வாறு கண்டியம்மை அவாவற்றளாகி, ஆடம்பர வாழ்வை வெறுத்து, ஆலயப் பணியும், அடியார் பணியும் இரு கண்களாகக் கொண்டு வாழ்ந்து வந் தாள். ஊரவர் பலர் அவளைப் பரிகசித்தார்கள். ''இத்துணை அழகிய இம் மாதரசி எத்தனையோ அரசர்களையும், ஜமீன்தார்களையும் விரும்பாமல் சாம்பலைப் பூசிக் கொட்டைக் கட்டித் திரியும் ஏழைப் பரதேசிகளை விரும்புகின்றாளே? பிழைக்கத் தெரியாதவள்; பைத்தியக்காரி; அறிவு இல்லாதவள்'' என்றெல்லாம் பேசி நகைத்தார்கள். ஊரவர் கூறும் நாணுரைதன்னைக் கண்டு பூணதுவாகக் கொண்டு, ''யார் எதனைச் சொன்னால் எனக்கென்ன? அடியவர் மகிமையை இவர்கள் அறிவாரோ? நல்ல தேனை நாய் பருகாது. அதுபோல் அடியவர் பெருமையைக் கொடியவர் அறியார்; இந்த உலக வாழ்வு இந்திரஜாலம்; கானல் தேர். நளமன்னன் ஒரு விநாடியில் நாடிழந்து நகரிழந்து கட்டிய ஒரு துண்டுடன் கானகம் போனான். இராமர் வாழ்வது ''நுதலிய மங்கலத்து நாள் தாழ்வினை யதுவரச் சீரை சாத்தினான்'' பட்டு பீதாம்பரம் உடுக்கவேண்டிய பட்டாபிஷேக தினத்தன்று மரவுரி உடுத்தான். எல்லாம் ஆண்டவன் அருள்படிதானே நடை பெறும். இறைவனுடைய கருணைத்திறத்தை உள்ளபடியே உணரவல்லார் யாவர்?'' என்று கண்டியம்மை கருதி தனது அருள் வாழ்க்கையை நடாத்தி வந்தாள்.

ஊரவர் கண்டியம்மையின் உள்ளத்தின் உயர்வை உணர்ந்தார்களில்லை. அவளுடைய அன்பின் பெருமையையும், ஒழுக்கத்தின் உண்மையையும், உலகுக்கு உணர்த்தவேண்டும் என்று கயிலை மேவும் கண்ணுதற் கடவுள் திருவுள்ளங் கொண்டருளினார்.

மன்மதனை எரித்த மகாதேவர், ஒரு நாள் ஓர் இளந்துறவி வேடங்கொண்டு, திருப்பூவணத்துக்கு வந்தார். நல்ல பூங்காவி ஆடையும், நெற்றியில் திருவெண்ணீரும், கையில் ஜெபமாலையும், புன்னகை தவழும் கருணை முகமும், மறைச்சிலம்பு ஒலிக்கும் திருவடியுங் கொண்டு ஐயன் வந்த நேரம் மாலைப் பொழுது. வீதிகளில் பெண்மணிகள் விளக்கேற்றிக் கொண்டிருந்தார்கள்.

சிவ மூர்த்தி பொதுமகளிர் வாழும் வீதிக்குச் சென்று, ஒரு பொதுமகள் வீட்டில் நுழைந்தருளினர். அவள் வரவேற்று உபசரித்தாள். ''இன்று இரவு தங்கலாமா?'' என்றார் ஈசன். ''நன்றாகத் தங்கலாம்; ஆயிரம் பொன் தர வேண்டும்'' என்றாள் அவள். ''ஓ! என்னிடம் ஆறு பைசாவே இருக்கின்றது'' என்றார் எம்பெருமான். ''ஓய்! ஆறு பைசாவா? எழுந்திரு. அந்தக் கண்டி வீட்டுக்குப் போ. மூன்று பைசா கொடுத்தால்கூட அவள் போதும் என்பாள். சீக்கிரம் போ'' என்று கடுகடுத்துக் கூறி விரட்டினாள் அம்மாது.

இப்படிப் பல வீடுகட்கும் சென்று சென்று அம்மகளிர் கூறும் புன்மொழிகளைக் கேட்டு, முடிவில் கண்டியின் திருமாளிகைக்கு எம்பிரான் எழுந்தருளினர்.

அடியாரைக் கண்டவுடன் கண்டி எதிர்கொண்டு அடிபோற்றி அழைத்தாள். தாய் முகங் கண்ட சேய்போல் உவகைப் பூத்தாள். ''பெருமானே! வருக! வருக! என்ன புண்ணியஞ் செய்தேனோ? தங்கள் திருவடி பட்டதனால் என் வீடும், நானும் புனிதமானோம். வினைகள் வெந்து பொடியாயின'' என்று துதி செய்தாள். ஆசனத்தின்மீது அமர்த்திப் பாத பூசை செய்தாள்.

இறைவன் அவளுடைய அன்பு நிலையைக் கண்டு திருவுள்ளம் மகிழ்ந்தார். ''கண்டீ! உன்னுடன் ஓர் இரவு தங்கலாம் என்று நினைத்து வந்தேன். இன்றிரவு நீ என்னைக் கணவனாக ஏற்றுக் கொள்ளலாமா?''

''சுவாமீ! தாங்கள் சிவபெருமானைப் போலவே காட்சித் தருகின்றீர். என் உடல் பொருள் உயிர் அனைத்தும் அடியார்கட்கே உரியவை. எனக்கென்று ஒன்றும் இல்லை. ஆதலால் தாங்கள் இங்கு உங்கள் விருப்பம்போல் இருக்கலாம். தாங்கள் வந்தது என் பாக்கியம்.''

''கண்டீ! உன் வார்த்தை இனிமையாக உளது. இங்கு ஓர் இரவு தங்கினால் என்ன கட்டணம் தரவேண்டும்?''

''ஐயனே! நான் தங்களைப் போன்ற அடியார்கட்குச் செலவு செய்யும் வகைக்கு, நீர் தரும் பொருள் எதுவாயினும் அதுவே போதுமானது.''

''கண்டீ! இதோ! இந்தா; இந்த ஆடையில் முடிந்திருப்பதை எடுத்துக் கொள்.''

கண்டி அந்தக் கந்தைத் துணியின் மூலையில் முடிந்திருந்த முடிச்சை அவிழ்த்துப் பார்த்தாள். அதில் ஆறு தம்பிடிகள் இருந்தன. அவற்றுள் ஒன்று பாசம் பிடித்த தேய்ந்த காசு. அந்த ஆறு செப்புக்காசுகளைக் கண்களில் ஒத்திக்

கொண்டாள். ''இது ஆறு கோடி செம்பொன்'' என்ருள். அதனைப் பெட்டியில் வைத்துவிட்டு, ''என்னையாள வந்த எந்தலே! இனி எனக்கு என்ன கட்டளை?'' என்ருள்.

''அன்பின் சிகரமே! நான் சென்று நீராடி, திருக்கோயிலுக்குச் சென்று வழிபாடு செய்துவிட்டு வருவேன். நான் இரவில் உணவு உண்ணமாட்டேன்'' என்று கூறிவிட்டு அடியார் கோலத்தில் வந்த ஆண்டவன் சென்ருர்.

உத்தமியாகிய கண்டியும் ஆலயம் போய் பெருமானை வணங்கிவிட்டு வீட்டுக்கு வந்து, பால், பழம் ஆயத்தம் புரிந்து வைத்தாள். கட்டிலே மலர்கள் இட்டு, பன்னீர் தெளித்து, நறுமணம் கமழ வைத்து அலங்கரித்து வைத்தாள்.

இரவு பத்து மணிக்கு கண்ணுதற் பெருமான் வந்தார். வந்தவரை வரவேற்று வணங்கிப் பால், பழம், தாம்பூலம் இவைகளைத் தந்தாள்.

''இவையெல்லாம் எதற்கு! நான் கொடுத்தது ஆறு காசு. இவைகள் ஐந்து ரூபாய்க்குமேல் இருக்குமே? கடவுளே! என்ஞல் உனக்கு எவ்வளவு செலவு? இந்தப் பாலும், பழமும் வேண்டாம். அமுதினும் இனிய உன் இன்னிசையால் ஒரு பாடல் பாடு. செவியாரக் கேட்கின்றேன்'' என்ருர்.

கண்டி கூடத்தில் திருவிளக்குமுன் தம்பூரா எடுத்து, சுருதி கூட்டி தன் மெல்லிய விரலால் மீட்டி இளந்தேன் வண்டு ரீங்காரம் புரிவதுபோல், பாடத் தொடங்கினுள்.

தர்மவதி—ஆதி

பல்லவி

ஆலமுண்டமரர்க்கு அமுதம் அளித்த திரு
நீல கண்டனே யருள்வாய்,

அநுபல்லவி

ஞாலமுண்ட மாயனும் நாலுமுகத் தூயனும்
நந்திமுதல் வந்திக்கும் சந்ததமும் சிந்திக்கும்

சரணம்

காலனை வதைத்தொரு பாலனை யாண்டவா
கனக சபையதனில் அனவரதத் தாண்டவா
வேலனைப் பயந்தொரு மூலற்கருள் பெய்தவா
முத்தமிழ் வல்லசிவ பத்தற்கருள் செய்தவா.

என்று அழகாக உள்ளம் உருகிப் பாடினுள்.

உடனே இறைவர், ''ஐயோ! வயிறு வலிக்கின்றதே. கடவுளே! என்ன செய்வேன்? வயிற்றுக்குள் இந்தப் பெரும் வேதனை வந்ததே. கண்டி! தோட்டத்திற்கு அழைத்துக் கொண்டு போ; மலங் கழிந்தால் நோய் விலகும்'' என்ருர்.



நகரத்தார் சங்கம்

கட்டிட வேலைகள் முடிவுறும் தறுவாயில் எடுக்கப்பட்ட படம்



'கோயமுத்தூர் நாட்டுக்கோட்டை நகரத்தார் தர்ம நிதி'

பேரூர் நந்தவனமும், மடமும்

# கட்டிடக்குழு உறுப்பினர்கள்



AR. முத்துவீரபபன
(செயற்குழு & கட்டிடக்குழு உறுப்பினர்)



AR. K. இராமனுதன்



ராம. ஏகப்பன்
(செயற்குழு & கட்டிடக்குழு உறுப்பினர்)



RM. மெய்யப்பன்



S. சோமசுந்தரம்

கண்டி தம்பூராவை வைத்துவிட்டு சுவாமியின் கரங்களைப் பற்றிக்கொண்டு தோட்டத்துக்கு அழைத்துச் சென்றாள். அங்கு போவதற்குள் இறைவன் வேட்டி, துண்டு அனைத்தும் மலம் நனைய ஒரே பேதியை யுண்டாக்கினார். சொல்லமுடியாத நாற்றம்.

''கண்டீ! ஆடைகள் பூராவும் மலமயமாகி விட்டனவே? என் செய்வேன்'' என்றார்.

கண்டி ''சுவாமீ! அதுபற்றி வருந்தவேண்டா. எல்லாம் சிவன் செயல்'' என்று கூறி பெருமானுக்கு வெந்நீரால் திருமஞ்சனஞ் செய்வித்தாள். மலம் பட்ட ஆடைகளை யெல்லாம் சிறிதும் அருவருப்பின்றித் தோய்த்து உலர்த்தினாள். புதிய ஆடை தந்து அவரை உடுத்திக்கொள்ளச் செய்து, அலங்கரித்த கட்டிலின்மீது அமர்த்தினாள். சந்தனம் கஸ்தூரி முதலிய நறுமணம் பூசினாள். ''சுவாமி! இப்போது உடல் நலந்தானே?'' என்றாள்,

''அம்மா! கண்டீ! உனக்கு என்னால் அதிக சிரமம். நான் தந்தது ஆறு காசு. நீ செய்யும் பணிவிடைக்கு அளவேயில்லை. இப்போது வயிற்றுவலியில்லை. என்னமோ எப்போதும் இல்லாத வலி இப்போது திடீர் என வந்தது. மலம் போனவுடன் வலி நின்றுவிட்டது; சகல நோய்களுக்கும் மலந்தானே மூல காரணம். இன்னும் ஒரு பாடல் பாடு. உன் பாடல் அமுதமயமாக இருக்கின்றது'' என்றார் ஈசன்.

கண்டியம்மை தம்பூராவை எடுத்து மீட்டி,

''பொங்கர வணிந்த ஞான போதனே வேதநாதா
எங்கெவர் ஏத்தினாலும் இன்னருள் புரியுமாறு
அங்கவர் முன்னே தோன்றும் அருட்பெருங் கடலே சம்பு
சங்கர மங்கைபாகா தமியனேற் கருள்செய் வாயே''

என்று பாடினாள்.

உடனே இறைவன் வயிற்று வலியால் துடிப்பவரைப்போல் நடித்து, ''அந்தோ! அந்தோ!'' என்று அலறினார். எழுந்து தோட்டத்துக்குச் செல்ல முயன்று, கூடம் வாசல் எல்லாம் நிரம்ப பேதி வெள்ளமாகச் செய்தார்.

கண்டி சிறிதும் கவலாது அத்தனையும் கழுவி, மெழுகித் தூய்மை செய்தாள். பெருமானை நீராட்டினாள். ஆடைகளைத் தோய்த்து உலர்த்தினாள். வேறு பட்டாடை தந்து, மலர்க் கட்டிலில் அமர்த்தினாள்.

''சுவாமி! இப்பாவியின் வீட்டிற்கு வருமுன் திருமேனி நன்றாக இருந்ததே; இந்தத் தீவினையேன் வீட்டிற்கு வந்தபின் திருமேனிக்கு இந்த இடர் வந்ததே. என்னை விரும்பி வந்தீரே, ஆறு காசு தந்தீரே. அந்தக் கடன் தீரவில்லையே. என்னை மன்னிக்கவேண்டும்'' என்று அவர் அடிமலர்மீது வீழ்ந்து கண்டி அழுதாள்.

''கண்டீ! கண் கலங்காதே. எல்லாம் இறைவன் செயல். இப்போது எனக்கு உடம்பு நன்றாக இருக்கின்றது; இன்னும் ஒரு பாடல் பாடு; இசை அநேக

நோய்களைப் போக்கும்'' என்றார். கண்டி நல்லது என்று தம்பூராவை எடுத்தாள். அவ்வளவுதான். ''கண்டீ! கண்டீ! குடலை முறுக்குதே! உயிர் துடிக்குதே! சிவா! சிவா!'' என்று கதறினர். அழகிய கட்டில், வெல்வெட்டு மெத்தை எல்லாம் மலமாகுமாறு செய்தார். ''கண்டீ! ஏதோ இப்படி பேதி ஆகின்றது. நான் என்ன செய்வேன். விலை உயர்ந்த மெத்தை தலையணை யெல்லாம் கெட்டுப் போயினவே'' என்றார்.

''ஆண்டவனே! இந்த அழிகின்ற பொருள்கள் கெட்டால் என்ன குடி முழுகிவிட்டதா? போனால் போகட்டும், தங்கள் திருமேனிக்கு இந்த இடர் வந்ததே; நான் மகாபாவி; என்பால் வந்ததனால்தானே இந்த இடர் வந்தது'' என்று கூறி வருந்தினள்.

மெத்தை முதலிய எல்லாவற்றையும் அப்புறப்படுத்தினள். அந்த வீடு முழுவதும் அலம்பினள். பெருமானை நீராட்டினள். வேறு நல்லாடை தந்து வேறு கட்டிலில் வேறு மெத்தையிட்டு இருத்தினள். ''சுவாமி! சற்றுப் பொறும்; இந்தப் பேதி நிற்குமாறு ஓமம், சுக்கு முதலியவற்றை இடித்து மருந்து தயாரிக்கின்றேன்'' என்றாள். பவரோக வயித்திய நாதருக்கு அவள் வைத்தியஞ் செய்ய முயன்றாள்.

விடிய விடிய சிவராத்திரியைப் போல் அவள் உறங்கவில்லை. உள்ளம் வருந்தவில்லை. பம்பரம்போல் சுழன்று பெருமானுக்கு அபிஷேகம் புரிவதும் பாடுவதுமாகவே அவ்வுத்தமி அன்பு செய்தாள். விடியற்காலை; இறப்பும், பிறப்பும் இல்லாத எம்பிரான், ''கண்டி! ஆ! ஆ! என் ஆருயிர் துடிக்கின்றதே. அம்மா! அம்மா! என்ன செய்வேன்? சிவா சிவா'' என்று கண்களை மூடினார். உயிர் நீங்கிய பிணம்போல் வீழ்ந்து விட்டார். உடம்பு பனிக்கட்டிபோல் ஆகுமாறு செய்தார்.

கண்டி அவ்வுடல்மீது வீழ்ந்து அழுதாள். ''என்னை விரும்பி வந்த வித்தகா! ஆறு காசு தந்நீரே? அக்கடனை நான் கழிக்கவில்லை. என்னைத் தீண்டாமல் மாண்டீரே! இனி இந்த உடம்பு யாருக்கும் உரியதாகாது. அந்தோ? என்ன நினைந்து வந்தீரோ? விருப்பம் நிறைவேறாமல் உயிர் துறந்தீரோ? தாங்கள் சென்ற உலகிற்கு வந்து தங்களைத் தழுவி ஆறு காசுக் கடனைத் தீர்ப்பேன். இனி இந்த உடல் கொண்டு வாழமாட்டேன்'' என்று இறைவன் திருமேனியைத் தழுவி அழுதாள்; தொழுதாள்.

பொழுது புலர்ந்தது. தன் வீடு, நிலம், புலம், தனம் தான்யம் எல்லாவற்றையும் வறியார்க்கு வழங்கிவிட்டாள். பெருமானுடைய திருமேனியைப் பன்னீரால் ஆட்டினள். மலர்களாலும், பட்டாலும் அலங்கரித்தாள். புஷ்ப விமானத்தில் ஏற்றி மயானத்துக்குக் கொண்டு சென்றாள். சந்தனக் கட்டைகளை அடுக்கினள். பெருமானுடைய திருமேனியை வைத்துக் கண்ணீர் சிந்தியவளாகித் தன் கையால் தீ வைத்து, மூட்டினள். மண்டி பற்றித் தீ விண்ணளவுங் கொழுந்து விட்டு எரிந்தது.

''என் ஆருயிர்க் காதலரே! நீர் சென்ற உலகிற்கு வருகின்றேன்'' என்று கண்டவர் யாவரும் 'ஆ! ஆ!' என்று அலறுமாறும் அதிசயிக்குமாறும் பயங்கரமாக எரிகின்ற ஜிதையின் மீது ஏறிப் படுத்தாள்.

உடனே நெருப்பு குளிர்ந்தது; அடியார் உடம்பு மறைந்தது. விண்ணில் வேத வொலியுடன் ஹர ஹரா என்ற நாத வொலி யெழ, வெள் விடையின்மீது, பச்சைநாயகியுடன் பவளமலைபோல் பரமன் காட்சியளித்தான்.

கண்டாள் கண்டி. ஆ! என்று எழுந்தாள். ''மூவரும் தேவருங் காணுத முதல்வா! என்னப்பனே! இது என்ன சோதனே? என்னே விரும்பி வந்த வித்தகனே?'' என்று புலம்பினுள். குதித்தாள், துள்ளினுள்; அருள் வெள்ளத்தில் ஆடினுள்; பாடினுள்.

இறைவன் அப்புனிதவதியின்மீது கருணே மழை பொழிந்து, ''அம்மா! உன் அன்பின் திறத்தை உலகுக்கு அறிவிக்கும் பொருட்டு வந்தோம். ஆறு காசுக்காக நீ உடல், பொருள், உயிர் எல்லாவற்றையும் தியாகஞ் செய்தனே; உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள்'' என்ருர்.

''ஆண்டவனே! உமது பாதம் என் தலேயிலே, இருக்கவேண்டும்'' என்று கேட்க நினேத்தாள். வாய் குழறி, ''என் பாதம் உன் தலேயிலே இருக்கவேண்டும்'' என்று கேட்டு விட்டாள். மீளவும், ''ஐயோ! வாய் தவறிவிட்டது. மன்னிக்க வேண்டும். பொறுத்தருள வேண்டும். உமது பாதம் அடியேன் சென்னியில் மன்னி நிற்கவேண்டும்'' என்ருள்.

இறைவன், ''கண்டீ! என் அன்புக் குழந்தையான உன் பாதம் என் தலேயில் இருக்கவேண்டும் என்று நான் விரும்பினேன். உன் வாக்கிலிருந்து அப்படியே வந்தது. நீ இப்போது கேட்டபடியே நமது திருக்கயிலேமலேயில் நீ எப்போதும் இருந்து என் பாதத்தைச் சூடிக் கொள்வாய். நான் விரும்பியபடி முதலில் உன் வாக்கில் வந்ததற்கு இணங்க, உன் நினேவுச் சின்னமாக தும்பை என்ற ஒரு செடி தோன்றுவதாக; அதில் மலரும் மலர்கள் உன் பாதம் போன்ற வடிவுடன் அமை வதாக; அத் தும்பை மலர் நமது அர்ச்சனேக்குச் சிறந்ததாக இருந்து பெருமை பெறுக. தும்பையால் அர்ச்சித்தார் துன்பம் நீங்கி இன்பம் பெறுவார்களாக'' என்று இறைவன் அருள் புரிந்து கண்டியம்மையைக் கயிலாயஞ் சேர்த்தருளினுர்.

தும்பைச் செடியும், தும்பை மலரும் தோன்றி சிவார்ச்சனேக்கு உரியவையாயின.

> ''மவுன வுப தேசசம்பு மதியுறுகு வேணி தும்பை
> மணி முடியின் மீதணிந்த மகதேவர்''
>
> —திருப்புகழ்.

# இனவளர்ச்சியில் இளைஞர் பொறுப்பு

பேராசிரியர் அர. சிங்கார வடிவேலன், எம். ஏ., பி. டி.
தமிழ்த்துறைத் தலைவர், ஸ்ரீ சேவுகன் அண்ணாமலைக் கல்லூரி, தேவகோட்டை.

மன்னருக்குப் பின்னோராய் வணிகத்தில் முன்னோராய்
நன்னர் வாழ்ந்திருந்தார் நம்மினத்து நகரத்தார்
இந்நாளிற் சற்றே இளைப்பதுபோல் தோன்றுகிற
தன்னினத்தைக் காத்தல் தம்பியரின் பொறுப்பாகும்
இளைஞர் சமுதாயம் எழுந்து புறப்பட்டால்
மலையும் கடுகாகும் மணலும் மலையாகும்
நாளை வருகின்ற நல்வாழ்வுப் பயிரென்றால்
வேளையிலே தூவும் வித்தே இளம்பருவம்
எழுபருவ வாழ்க்கையிலே இன்பருவம் அப்பருவம்
தொழுபருவம் இளம்பருவம் தொல்லை தரும்பருவம்
பிள்ளையவன் என்றாலும் பெரும்பையன் ஆனதனால்
தொல்லை தருபவனைத் தொடமுடியா அரும்பருவம்
அரும்பிவரும் மீசையினால் அன்னை மகனென்றே
தரும்பரிசாம் முத்தம் தரமுடியாத் தடைப்பருவம்
அப்பாவைக் காசுக்கும் அம்மாவைச் சோற்றுக்கும்
சிப்பாவை அழகுக்கும் சில்லறையைச் செலவுக்கும்
பள்ளிகளை வம்புக்கும் பாவையரைக் கண்ணுக்கும்
கல்வியினைப் பிறருக்கும் கடவுள் படைத்தனவாய்
எண்ணும் பருவம் இளம்பருவம்; ஆசான்மார்
புண்ணாகி நெஞ்சம் புழுங்குவதே அப்பருவம்.
கற்றைச் சடைமுடியும் காதுவரை கிருதாவும்
சுற்றிப் பிடித்திழுக்கும் சோளிக்கைச் சட்டைகளும்
தாவணியைக் கயிலியெனத் தம்பியர்கள் அணிவதுவும்
தேவையில்லை அவையென்றே தெரிவையர்கள் திரிவதுவும்
இந்நாளில் வாழும் இளைஞர்கள் எவரென்று
கண்ணாரக் காட்டும் கலிகாலக் கோலங்கள்
சத்தியினை ஆளும் கருத்துடனே இளைஞர்களின்
புத்தியினை ஆண்டால் புத்துலகம் பூத்துவிடும்
பண்டிருந்த நம்மிளைஞர் பதங்காட்டி இனிமேலே
கொண்டுயர வேண்டும் கொள்கைகளைக் கூறிடுவேன்

கட்டுமரம் ஏறிக் கடல்கடந்த நம்மிளைஞர்
பெட்டியடிப் பையனெனப் பிரப்பம்பாய் சுற்றிவைத்தார்.
பட்டைத் திருநீறு பார்ப்பதற்குப் பண்டாரம்
மொட்டைத் தலையாலே வெட்டும் பணமிச்சம்
கட்டும் முழுத்துண்டோ கால்வரைக்கும் வாராது
செட்டாகக் காசைச் செலவழித்து, வரும்போது
கட்டாக நோட்டைக் கக்கத்தில் துண்டாக்கி
வெட்டவெளிப் பொட்டலெலாம் வீடாக்கி வைத்தார்கள்
காரேறும் முதலாளி கண்மணியே என்றாலும்
தேரேறி வருகின்ற தெய்வமென மேலாளின்
எச்சிற் பணிக்கம் எடுத்தூற்றிக் கழுவியதால்
மிச்சப்படுத்தி மேலாகி வாழ்ந்தார்கள்.
செட்டை உயிரென்றும் சிக்கனமே முதலென்றும்
கட்டை இவ்வுடலைக் கசக்குவதே வாழ்வென்றும்
அன்றிருந்த இளைஞரெலாம் அறிந்தடங்கி வாழ்ந்ததனல்
குன்றாக வாழ்ந்தார் கொடையும் பலபுரிந்தார்
இந்நாள்நம் இளைஞருக்கோ எழுந்தால் இடுப்புவலி
நின்றாலோ கால்வலியாம் நினைத்தாலும் மனம்வலிக்கும்
ஆடைகளோ ஐந்தாறும் அவற்றைத் துவைப்பதெனில்
பாடையிலே ஏறுவதாய்ப் பலருக்குத் தோன்றிவிடும்
பிழைப்புக்கு வழியில்லை பிறசாதி மக்களைப்போல்
உழைப்புக்கு மனமில்லை உடலுக்கும் தெம்பில்லை
மலேயாக் கடையில்லை மாளிகையின் முன்முகப்பில்
நிலையில்லை கதவில்லை நெஞ்சில் துணிவில்லை
படிக்கத் தொகையில்லை படித்தாலும் வகையில்லை
அடிக்கத் தெம்பில்லை அரசும் நமக்கில்லை
செல்வக் கணக்கெடுத்தால் செல்வத்தால் முந்துமினம்
கல்விக் கணக்கெடுத்தால் கால்பாவத் தொடங்குமினம்
தனியாய்க் கணக்கெடுத்தால் தாழ்ந்தோரில் தாழ்ந்த இனம்
'பனியாக்கள் போலப் பணமும் பெருத்த இனம்
ஆதலினல் நம்மினத்தே அரசாங்கம் தாழ்ந்ததுவாய்
வாதாடிப் பார்த்தாலும் வகைப்படுத்த மாட்டாது
அன்றன்று மாறும் அரசாங்கச் சட்டம்
குன்றான செல்வரையும் குடை சாய்க்கப் பார்க்கிறது
வேட்டியிலே தீப்பற்றி வீதியிலே ஓடுகையில்
பாட்டி பசிதீர்க்கப் பணக்காரர் முயல்வாரா?

கலியாணச் சந்தையிலே கடைச்சரக்காய் நம்மிளைஞர்
விலையேறிப் போவதினும் வேறுவழி இல்லையெனக்
கண்டுகொண்ட காரணத்தால் காளையிலே கூறுகிறார்
பெண்டுகளாய்ப் பிறந்தவர்கள் பேதலித்து வாடுகிறார்
வருவாயைப் பாராமல் மணமுடித்தால் இளைஞரெலாம்
தெருவாயைப் பார்க்கும்நிலைதெளிவாக உள்ளதனால்
பிழைக்கவழி காட்டாமல் பெருங்கூட்டம் கூட்டுவதால்
அழைப்பைச் சுருக்கியடி அதுபோதும் என்பதனால்
சீதனமும் ஒழியாது; செல்வர் மனந்திருந்தார்
மாதினமும் வாழாது; வேதனையும் தீராது
எண்ணாத எண்ணமெலாம் எண்ணி மனமுருகும்
கண்ணான இளைஞர்களே! காதலிக்க வாருங்கள்
ஏழை இளைஞர்களே! இல்லறத்தைப் பணக்காரப்
பாளை முகத்துப் பாவையுடன் கொள்ளுங்கள்
நீங்காத செல்வம் நிறைந்திருக்கும் இளைஞர்களே!
தூங்காத ஏழைகளின் தோகைகளைக் கட்டுங்கள்
செட்டி மகனே! செய்தொழிலைக் கற்றுக்கொள்.
வெட்டிப் பழகிடுக! வேல்வீச்சும் கற்றிடுக.
இருப்பில்லை என்றே ஏங்கித் தவிக்காதே
செருப்புத் தொழிலும் சிறப்பென்று காட்டிடுக.
வாட்டி வதைக்கும் வறுமையிலே நிற்பாயா
தோட்டித் தொழிலுக்குத் துணிந்து புறப்படுக.
மச்சுத் தொலைந்ததுவா மயங்கிக் கலங்காதே
தச்சுத் தொழிலுக்குத் தலைநிமிர்ந்து புறப்படுக
முத்தோடு வைரத்தை மூழ்கடித்து விட்டாயா
கொத்துக் கரண்டியுடன் கூரையிலே ஏறிடுக.
செய்யும் தொழிலே தெய்வமெனச் செய்வாயேல்
வையம் காலடியில் வந்து தவங்கிடக்கும்
பொன்னை மதியாதே பொருளை நினையாதே
தன்னை உயர்த்துபவன் தானென்று புறப்படுக.
ஆச்சி மகனே! ஆருயிரே நல்லிளைஞ!
பூச்சி பிடிப்பார் போயொழிந்து கொள்ளாதே
கூட்டை உடைத்துக் குதித்துப் புறப்பட்டுப்
பாட்டை அமைத்துப் படைதிரட்டி நம்மினத்தை
நாட்டில் வளர்த்திடுக நன்று.

# கோவலன் சமணனு ?

(புலவர்மணி—சித்தாந்த வித்தகர் முரு. பழ. இரத்தினம் செட்டியார்)

காவிரிப் பூம் பட்டினத்தில் மன்னர் பின்னேர் என மதிக்கத்தக்க வகையில் நம் நகரத்தார்கள் வாழ்ந்திருக்கிருர்கள். வாணிபத் துறையில் மிகச் சிறந்து விளங்கிய அவர்கள் பெரும் ஒப்புரவாளர்களாகவும் இருந்தனர் என வரலாறு கூறுகிறது. அவர்களின் ஈகைத் திறத்தையும் செல்வ வளத்தையும் பாராட்டிச் சோழ மன்னன் ''எட்டி'' என்னும் பட்டம் வழங்கி இருக்கிருன். பிற்காலத்தில் இஃதே ''செட்டி'' என மருவி வழங்கலாயிற்று. ''செட்டுடையவர்கள்'' ''செட்டியார்கள்'' எனச் சொல்வது பிழையாகும். எட்டிப் பட்டம் பெற்றவர் களை ''எட்டிகள்'' என மக்கள் அழைத்தனர். கால வழக்கில் ''எட்டிகள்'' என்பது ''செட்டிகள்'' என மாறிற்று. பின்னர் மரியாதைக்குரிய ஆர் விகுதி சேர்த்துச் ''செட்டியார்கள்'' என நகரத்தார்கள் அழைக்கப்படலாயினர்.

பூம்புகார் நகர் எனக் கூறப்படும் காவிரிப்பூம் பட்டினத்தில் பெருங்குடி வணிகர் மரபில் கோவலனும் கண்ணகியும் தோன்றினுர்கள் எனச் சிலப்பதிகாரம் கூறுகிறது. எனவே அவர்கள் நகரத்தார் குலத்தைச் சார்ந்தவர்கள் எனக் கொள்ளுவதில் தவறில்லை. கோவலனின் தந்தை கடல் வாணிபத்தில் ஈடுபட்டவன் என்பதை ''மாநாய்கன்'' என்னும் அவன் பெயர் உணர்த்துசிறது. ''நாய்கன்'' என்பது பிற்காலத்தில் ''நாகன்'' என மாறி நாளடைவில் ''நாகப்பன்'' என வழங்கலாயிற்று. இன்றும் நகரத்தார்களில் பலர்க்கு ''நாகப்பன்'' என்னும் பெயர் உண்டு. நாகத்தை வணங்குவதால் ''நாகப்பன்'' என்னும் பெயர் வந்த தெனச் சிலர் கூறுவதுண்டு. நகரத்தார்கள் நாக வணக்கத்தைச் சிறப்பு வணக்க மாகக் கொண்டவர்கள் அல்லர். ''நாய்கன்'' என்பதே ''நாகன்'', ''நாகப்பன்'' என மருவி இருக்கவேண்டும்.

கண்ணகியின் தந்தை பெயர் ''மாசாத்துவான்''. நில வாணிபத்தில் அவன் ஈடுபட்டவன் என்பதை உணர்த்தும். ''சாத்துவான்'' என்பதே பிற்காலத் தில் ''சாத்தன்'', ''சாத்தப்பன்'' என மருவி வழங்கலாயிற்று. நகரத்தார்களில் பலர்க்கு ''சாத்தப்பன்'' என்னும் பெயருண்டு.

கண்ணகி என்னும் பெயர் பிற்காலத்தில் ''கண்ணம்மை, ''கண்ணுத்தாள்'' என வழங்கலாயிற்று. இன்னும் நகரத்தார் குலப் பெண்களுக்குக் ''கண்ணம்மை'' என்னும் பெயருண்டு. நாட்டரசன் கோட்டையில் ''கண்ணுத்தாள் கோயில்'' இருப்பதைக் காண்கின்ருேம்.

கோவலன் என்னும் பெயர் ''கோபாலன்'', ''கோவிந்தன்'' என வழங்க லாயிற்று. இன்றும் நகரத்தார்கள் ''கோபால் செட்டியார்'', ''கோவிந்தன் செட்டியார்'' என்னும் பெயருடையவர் பலருண்டு.

கோவலனும் கண்ணகியும் எந்த மதத்தைச் சார்ந்தவர்கள்? என்னும் வினவிற்குத் தமிழ் அறிஞர்கள் குழப்பமிக்க விடையே அளிக்கின்றனர்.

நகரத்தார்கள் பரம்பரையாகச் சைவ சமயத்தைச் சார்ந்தவர்கள். அவர்களில் ஒன்பது கோயில்களும் சிவன் கோயில்களே ஆகும். அவர்கள் உபதேசம் பெறுவது ''பஞ்சாட்சர'' மந்திரமாகும். சைவ சமயத்தைச் சார்ந்த, வேறு குலத்தவர் கடைப்பிடிக்காத சில சிறப்பு வழக்கங்கள் நகரத்தாரிடையே உண்டு. அவ்வழக்கங்கள் அழுத்தமான சைவப்பற்றுடை உள்ளத்தினர் நகரத்தார்கள் என்பதை ''உள்ளங்கை நெல்லிக்கனி'' போல் காட்டுகின்றன.

மணமகளையும் மணமகனையும் முதன்முதல் வீட்டிற்குள் அழைத்து வரும் போது திருநீறு இடுவது நகரத்தார் வழக்கம். சைவ சமயத்தைச் சார்ந்த ஏனைக்குலத்தினர் திருநீற்றோடு குங்குமம் சேர்த்து இடுவர். திருநீற்றைத் தனித்த மங்கலப் பொருளாக ஏனைக் குலத்தோர் கொள்வதில்லை. நகரத்தார்களோ மண மக்களுக்குக் குங்குமம் இடாமல் தனித்த திருநீறே மங்கலம் எனக்கொண்டு அதனையே இட்டு வருகின்றனர். தொலை தூரங்களுக்கு பயணம் புறப்படும்போது திருநீறு மட்டுமே இட்டு வழியனுப்புவதை இன்றும் காணலாம்.

சோதிட சாஸ்திரப்படி கார்த்திகையும், திருவாதிரையும் விசேடங்கள் செய்வதற்குக் கூடாத நட்சத்திரங்களாகும். ஆனால் நகரத்தார்களோ முருகப் பெருமானுக்கும் கூத்தப் பெருமானுக்கும் உகந்த அந்நட்சத்திரங்களில் தங்கள் பிள்ளைகளுக்குக் கார்த்திகைப் புதுமையும் திருவாதிரைப் புதுமையும் செய்கின்றனர். மார்கழி மாதத்தில் பிள்ளையார் நோன்பு என்னும் ஒரு விரதத்தைத் தங்கள் குலத்திற்கே உரிய ஒரு சிறப்பு விரதமாகக் கொண்டுள்ளனர். நகரத்தார்கள் அழுத்தமான சைவசமயப் பற்றுடையவர்கள் என்பதை இவ்வழக்கங்கள் மிகத் தெளிவாகக் காட்டுகின்றன.

பரம்பரையாகச் சைவ சமயத்தில் ஊறித்திளைத்த நகரத்தார் மரபு சமணசமயச் சார்புடையதாக எக்காலத்திலும் இருந்திருக்க முடியாது.

கோவலனும் கண்ணகியும் பிறப்பால் சைவ சமயத்தைச் சார்ந்தவர்களாகவே இருந்திருக்கவேண்டும். அவர்கள் திருமணம் எவ்வாறு நிகழ்ந்த தென்பதை இளங்கோவடிகள் பின்வருமாறு கூறுகிறார்:-

''சாலி யொருமீன் தகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டித்
தீவலம் செய்வது காண்பார்கண் நோன்பென்னை''

வேத விதிப்படி ஓமம் வளர்த்துப் பிராமணர் மந்திரம் சொல்லத் தீவலம் வந்து திருமணம் நடந்த செய்தி இவ்வடிகளால் நன்கு புலனாகுகிறது. இதிலிருந்து இத்திருமணம் வைதீக சைவத் திருமணம் என்பது தெளிவு. ஒரு சிலர் சமணர்களிடையேயும் இவ்வாறு திருமணம் நிகழ்வதுண்டு எனக் கூறுகின்றனர். ஆனால் இளங்கோவடிகள் கூறும் இத்திருமணம் சமண சமயத்தைச் சார்ந்ததெனக் கொள்வதற்கில்லை. காரணம் அத்தகைய குறிப்பு எதுவுமில்லாமல் ''மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட'' என இளங்கோவடிகள் கூறுவதேயாகும்.

சமணத் திருமணமாயிருந்தால் சமண முனிவர்களோ, சமண இல்லறத்தினரோ அத்திருமணத்திற்கு வந்து வாழ்த்தினரென அவர் நிச்சயம் குறிப்பிட்டிருப்பார். அவ்வாறு அவர் குறிக்காமையால் இதனை வைதீகத் திருமணம் என்றே கொள்ள வேண்டியிருக்கிறது.

திருமணம் முடிந்ததும் கோவலனையும் கண்ணகியையும் பெற்றோர்கள் வேறு வைக்கின்றனர். நகரத்தார் குலமரபில் இன்றும் ''வேறு'' வைப்பது வழக்கத்தில் உள்ளது.

கோவலன் முதன்முதல் தனித்துக் கண்ணகியோடு அளவளாவும்போது பின்வருமாறு அவளைப் பாராட்டுகின்றான்:-

''குழவித் திங்கள் இமையவ ரேத்த
அழகொடு முடித்த அருமைத் தாயினும்
உரிதின் நின்னோ டுடன்பிறப் புண்மையிற்
பெரியோன் தருக திருநுத லாகென
அடையார் முனையகத் தமர்மேம் படுநர்க்குப்
படைவழங் குவதோர் மண்புண் டாகலின்
உருவி லாளன் ஒரு—பெருங் கருப்புவில்
இருகரும் புருவ மாக வீக்க
மூவா மருந்தின் முன்னர்த் தோன்றலில்
தேவர் கோமான் தெய்வக் காவற்
படைநினக் களிக்க—வத னிடைநினைக் கிடையென
அறுமுக ஒருவனோர் பெருமுறை யின்றியும்
இறுமுறை காணும் இயல்பினின் அன்றே
அஞ்சுடர் நெடுவே லொன்றுநின் முகத்துச்
செங்கடை மழைக்கண் இரண்டா வீத்தது''...

சாதாரணமாக ஒரு பெண்ணைப் பாராட்டும்போது, ''பிறை போன்ற நெற்றி'', ''வேல் போன்ற கண்'' என்று சொல்வதுதான் வழக்கம். கோவலனோ இங்கே, ''சிவபெருமான் சூடிய பிறைபோன்ற நெற்றி'', என்றும், ''முருகப் பெருமான் கையில் ஏந்திய வேல் போன்ற கண்கள்'' என்றும் சொல்லிக் கண்ணகியின் அழகைப் பாராட்டுகின்றான். சைவசமயத்தைச் சாராதவனென்றால் இவ்வாறு பேசமுடியுமா? தனித்து மனைவியோடு இருக்கும்போது சிவபெருமானின் நினைவும் முருகப்பெருமானின் நினைவும் ஒரு சமணனுக்கு உண்டாகுமா? சைவ குலத்தவனாக இருந்ததால்தான் கோவலன் வாயிலிருந்து அவனையறியாமலேயே சிவபெருமானின் பெயரும் முருகப்பெருமானின் பெயரும் வருகின்றன. சைவ புராணங்களில் திளைத்த ஒருவனால்தான் இவ்வாறு பேசமுடியும். கோவலன் பிறப்பால் சைவ சமயத்தவன் என்பதில் எவ்வித ஐயமுமில்லை. அவன் பேசிய இச்சொற்களே இதற்குப் போதுமான சான்றாகும்.

கோவலன் மாதவியினிடத்தே சென்று வாழும்போதுதான் சமண சமயப் பள்ளிகளுக்குச் சென்றிருக்கவேண்டும். பிறப்பால் சைவனாகிய அவன் அக்காலத்தில் புதிதாகப் புகுந்த சமண சமயக் கொள்கையில் மெல்ல, மெல்ல ஈடுபாடுகொண்டிருக்கிறான். வாழ்க்கையில் நெறி தவறிச் செல்வோருக்கு மன

ஒடிவு ஏற்படுவது இயல்பேயாகும். மன ஒடிவு ஏற்பட்டதும் ஆறுதல் பெறுவதற்காகப் புதிய கொள்கைகளில் ஈடுபாடு கொள்வதுண்டு. கோவலனும் இவ்வாறுதான் சமண சமயக் கொள்கையில் ஈடுபாடு கொள்ளத் துவங்கியிருக்கிருன். அவன் காலத்தில், விரும்பிய சமயத்தில் சேர யாவர்க்கும் உரிமையிருந்திருக்கிறது. சோழ அரசன் சமண, பௌத்த சமயப் பிரசாரத்திற்கு நிறைய இடம் அளித்திருக்கிருன். அவன் சிறந்த சைவனுகயிருந்தும் வேற்றுச் சமயங்களின்மீது வெறுப்புக்கொள்ளாமல் எல்லாச் சமயத்தினரும் ஒற்றுமையோடு வாழ அநுமதித்திருக்கிருன். கோவலன் அடிக்கடி அறவோர் பள்ளி சென்று அவர்களின் உபதேசத்தால் சமண சமயச் சார்பினனுக இடையில் மாறியிருக்கிருன்.

கண்ணகியை அழைத்துக்கொண்டு மதுரைக்குச் செல்லும்போது, கோவலன் முற்றிலும் சமண சமயத்தைச் சார்ந்தவனுகிவிட்டான் என நாம் எண்ணவேண்டியிருக்கிறது. சமண சமயத்து மூதாட்டியாகிய கவுந்தி அடிகளைக் கோவலனும் கண்ணகியும் கண்டு தொழுகின்றனர். அப்பொழுது அவள் அவ்விருவரையும் பார்த்து,

''உருவும் குலனும் உயர் பேரொழுக்கமும்
பெருமகன் திருமொழி பிறழா நோன்பும் உடையீர்''

எனக் கூறுகிருள். ''பெருமகன் திருமொழி பிறழா நோன்பும் உடையீர்'' என அவள் கோவலன்-கண்ணகியை விளிப்பதால், அவ்விருவரும் சமண சமயத்தைச் சார்ந்தவர்கள் என அவள் கொள்கிருள் என்பது புலனுகிறது. ''பெருமகன்'' என்பது இங்கே அருகக் கடவுளைக் குறிப்பதால், அருகன் திருமொழியைப் பின்பற்றும் இவ்விருவரும் சமண சமயச் சார்பினரே ஆதல் தெளிவு. ''கணவன் எவ்வழி அவ்வழி மனைவி'' நிற்பது இயல்பாதலால், கோவலன் சமணனுக மாறியதும் கண்ணகியும் அவன்வழி நிற்கவேண்டியதாயிற்று. இங்கே நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டிய ஒரு கருத்து உண்டு. சமண சமயம், பரத்தை மாட்டுச் செல்வதைப் பெரியதொரு தீய ஒழுக்கமாகக் கொள்ளும் தன்மை உடையது. கோவலனே பரத்தை மாட்டுச் சென்று நெறி தவறியவன். அவனைக் கவுந்தி அடிகள், ''உயர் பேரொழுக்கம்'' உடையவன் எனக் கூறுகிருள். பிறப்பால் கோவலன் சமணனுக இருந்தால், கவுந்தி இவ்விடத்து அவனைக் கண்டித்திருப்பாள். பிறப்பால் சைவனுக இருந்து, புதிதாகச் சமணனுகக் கோவலன் மாறியிருப்பதால்தான், புதிதாகச் சேர்ந்தவனை அணைத்துப்பேசும் இயல்புபற்றிக் கவுந்தி அவனை ''உயர் பேரொழுக்கம்'' உடையவன் என விளித்திருக்கிருள். இதிலிருந்து கோவலன் புதிதாகச் சமண சமயத்தைச் சார்ந்தவன் என்பது புலனுகிறது.

இடையர்குல மாதாகிய மாதரி இடத்துக் கண்ணகியை அடைக்கலம் புகுவித்தபின்னர், கண்ணகி கோவலனுக்கு உணவு சமைக்கிருள். அப்பொழுது மாதரி, ''சாவக நோன்பிகள் அடிகள் ஆதலின்'' எனக் கூறுவதால், சமண சமய இல்லற நோன்புடையவன் கோவலன் என்பது விளங்குகிறது. இவ்விடத்தில்தான் கோவலன் சமணன் என்பதை நாம் தெளிவாக அறிய முடிகிறது.

கோவலன் வெட்டுண்டபின்னர், கண்ணகி மதுரை அரசனிடம் அவன் குற்றமற்றவன் என்பதை மெய்ப்பிக்கிருள். மனச்சான்று ஒறுக்க அரசன் உயிர்

நீக்கின்றான். கண்ணகி மதுரைமா நகரத்தை எரி உண்ணுமாறு செய்கிறாள். அதன்பின் செங்குன்றம் ஏறி, வானவூர்தியில் கோவலனோடு விண்ணுலகு எய்து கிறாள். இதன்பிறகு, கோவலன் தந்தை புத்தமதத் துறவி ஆகின்றான். அவன் தாய் உயிர் நீக்கின்றாள். கண்ணகியின் தாயும் உயிர்நீக்க, அவள் தந்தை சமண சமயத் துறவி ஆகின்றான்.

பிறப்பால் கண்ணகியும் கோவலனும் சமண சமயத்தைச் சார்ந்தவர்களாக இருந்தால், அவர்கள் தந்தைமார் இருவரும் சமணத் துறவிகளாக அன்றோ போய் இருக்கவேண்டும்? சமணனாகிய கோவலனின் தந்தை ஏன் புத்தமதத் தைச் சாரவேண்டும்? இதிலிருந்து தந்தைமார் இருவரும் மன வெறுப்பால் விரும்பிய வெவ்வேறு மதத்தில் போய்ச் சேர்ந்திருக்கிறார்கள் எனக் கொள்ள வேண்டியிருக்கிறது. கோவலன் சமணனாக மாறியும் வெட்டுண்டதால், சமணம் தன் மகனுக்கு நன்மை விளைவிக்கவில்லை எனக்கருதி அவன் தந்தை புத்தமதத்தில் போய்ச் சேர்ந்திருக்கிறான், தன் மகள் பத்தினித் தெய்வமாக வழிபடத்தக்கவள் என உலகம் கருதுமாறு செய்தவள் கவுந்தியேயாதலால், கண்ணகியின் தந்தை கவுந்தி அடிகளின் மதமாகிய சமண சமயத்தைச் சார்ந்திருக்கிறான். மன வெறுப் பால் இவ்வாறு அவர்கள் மதம் மாறியிருக்கிறார்களே அல்லாமல் பிறப்பால் அவர்கள் சைவ சமயத்தைச் சார்ந்தவர்களே எனக் கொள்ளவேண்டியிருக்கிறது.

''கோவலன் கண்ணகி'' குடும்பத்தினர்தாம் இவ்வாறு மதம் மாறி அல்லல் பட்டிருக்கிறார்களே அல்லாமல் அக்காலத்தில் நகரத்தார் மரபில் வேறெக் குடும்பத்தினரும் சைவ சமயத்தைத்தவிர வேறு எச்சமயத்திற்கும் செல்லவில்லை என நாம் அறியவேண்டும். நகரத்தார்கள் எக்காலத்திலும் சைவ சமயத்தைச் சார்ந்தவர்களாகவே இருந்திருக்கின்றனர். இன்னும் அவர்களில் யாரும் மதம் மாறியதில்லை.

காரைக்காலம்மையார், பட்டினத்தார் போன்ற சைவ அருளாளர்கள் தோன்றிய நகரத்தார் மரபில் சைவ சமயத்தைச் சார்ந்த ''கோவலன்-கண்ணகி'' குடும்பம் மதம் மாறிய நிகழ்ச்சி ஒரு புறனடை நிகழ்ச்சியேயாதலால், நாம் அதுகுறித்து வருந்தவேண்டியதில்லை. தேவாரம் பாடல் பெற்ற சிவத் தலங்களில் கோடிக்கணக்கான தொகையினைச் செலவிட்டுச் சிவாலயத் திருப்பணி செய்திருக்கிற பெருமை நம் குலத்திற்கே உரிய தனிப்பெருமை என்பதை நினைந்து மகிழ்வோமாக.

---

ஒரு லட்ச ரூபாய் என்பது ஏழை இந்தியாவில் மிக நல்ல தொகைதான்! ஆனால் நம் சமூகத்தில் அது ஒன்றுமே இல்லா தது போன்ற நிலைதான். ஒரு லட்சம் வைத்திருந்து இரண்டு பெண்கள் இருந்தால் போதும், உடன் பிறந்த ஆண்பிள் ளைக்குக் கிடைப்பது 'அட்ரஸ்' (வீட்டு விலாசம்)தான்! திரு மணத்திற்கே போதாது இந்தப் பணம்; கடவுள் கிருபை யால் கடனில்லாமல் தந்தை விட்டால், அதுவே போதும்!

சுப. அருணாசலம் (சேலம் மலர்)

---

# நாம் முன்னேற...

(ஆத, சிங்காரம் செட்டியார், பி,எஸ்ஸி.)

நம் நாட்டில் பல சமூகங்கள் இருக்கின்றன. அதில் நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகமென்பது ஒன்று. குறைந்த ஜனத்தொகையாகவிருந்தாலும் பெரும்பாலோர் அன்றே வெளிநாடுகள் சென்று வாணிபம் செய்து, தாங்களும் பொருளை ஈட்டி, அந்தந்த நாடுகளையும் செழிக்கச் செய்திருந்தார்கள். இன்றோ நம்மனுடைய நிலைமையும், அந்தந்த நாடுகளின் நிலைமையும் முற்றிலும் மாறி விட்டன. அதற்கேற்ப உள்நாட்டில் பல முக்கிய நகரங்களிலும் பட்டிதொட்டி களிலும் வியாபாரம் செய்துவருகிறோம். அதில் நாம் வாழும் கோவை மாநகரமும் ஒன்றாகும். இங்கு நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கமொன்றை அமைத்து, அதற்கு ஒரு கட்டிடமும் அமைத்து, அதை இன்று ராஜா சர் மு. அ. முத்தையா செட்டியார் அவர்கள் திறப்பு விழா செய்யவிருக்கிறார்கள் என்பதை நினைத்து அளவிலா மகிழ்ச்சியடைகிறோம்.

எல்லா சமூகங்களும் வெகுவேகமாக முன்னேறிக்கொண்டு வரும்பொழுது, நாம் மட்டும் பின்தங்கிவிட்டோம். ஏன்? அதற்குக் காரணங்கள் பல. அனைவரும் அறிந்ததே, அதை அறிந்து நாம் முன்னேற வழிவகை செய்யவேண்டும்.

தெய்வ பக்தியும், ஒழுக்கமும், கடமையும், கட்டுப்பாடும், உண்மை அறிவும், நூலறிவும், தொழில் நுணுக்கமும், நாணயமும் உள்ள நாம் அன்றாட வாழ்க்கையில் வரவிற்குத் தகுந்த செலவுகளைச் செய்துவருவதுபோல், விசேட காலங்களிலும் செலவு நடைகளைக் குறைத்துவந்தால், நாமும் வெகு சீக்கிரத்தில் முன்னேறலாம். இதற்கு யார் யாருடைய ஒத்துழைப்புத் தேவையோ அதையதை அவரவர்கள் செய்யவேண்டும். நாம் இன்னமும் அதைச் செய்ய காலம் தாழ்த்திக் கொண்டு வருகிறோம். இனியும் காலம் கடத்தாமல் ஆவன செய்யவேண்டுவது அவசியம்.

பிற சமூகங்களில் ஒருவருக்கொருவர் உதவி ஒத்தாசை செய்து முன்னுக்கு வருவதுபோல், நம் சமூகத்தில் செய்யவில்லை. அவரவர்களால் முடிந்த உதவி யைச் செய்து எல்லா விதத்திலும் மற்றவர்களுக்கு உதவவேண்டும்.

---

மனிதர்களால் காலத்தை மாற்ற முடியவில்லை. ஆனால் காலம் மனிதர்களை மாற்றியிருக்கிறது.

ஆர். எல். சாத்தப்பன்

---

# எங்கள் நிருவாக இயக்குனர்களும் செயற்குழுவும்

(S. அண்ணுமலை, ப்ருக்பாண்ட் இந்தியா லிமிடெட், கோவை)

சிரிக்கச் சிரிக்கப் பேசிச் சிந்திக்கவைக்கும் எங்கள் தலைவர் **கரு.** (SM. KR. கருப்பஞ் செட்டியார்)

ஆழ்ந்த அனுபவத்துடன் உற்சாகமாக ஓடியாடிப் பணிபுரியும் உபதலைவர் **மா.** (PL. S. RM. ராமனுதன் செட்டியார்).

உழைப்பவர்களுக்கு ஊக்கமூட்டும், உழைப்பால் உயர்ந்த மற்றொரு உபதலைவர் மயில்மனை **ராம.** (K. ராமனுதன் செட்டியார்).

அமைதியின் இருப்பிடம், அன்பின் உறைவிடம், பண்பட்ட உள்ளம் படைத்த எங்கள் பொதுச் செயலாளர் **ரெ.** (SM. ரெங்கனுதன் செட்டியார்).

ஆர்வத் துடிப்போடும் அளவுகடந்த வேகத்தோடும் எடுத்ததைத் திறம்படச் செயலாக்கும் எங்கள் நிருவாகச் செயலாளர் **சோமு.** (L. சோமு).

எதையும் ஆர்வத்துடன் அலசி அலசித் தெளிவான கருத்துக்களைச் சொல்லும் பொருளாளர் **சிவ.** (PL. S. RM. சிவனடியான் செட்டியார்).

சீரிய கருத்துக்களைச் சொல்லி, செயலாக்க உறுதுணையாக நிற்கும் செயற்குழு உறுப்பினர்கள்.

இதன் பயனுக இன்று நம் உள்ளங்களைக் கவர்ந்து எழில் மிக்குற்று நிற்கிறது நம் சங்கக் கட்டிடம்.

இதன் வரலாற்றிலே எத்தனையோ திருப்பங்கள்—எப்பொழுது முடியுமென்ற ஏக்கங்கள்—எப்படி முடியுமென்ற கேள்விக் குறிகள்.

இருந்தபோதிலும் எல்லாவற்றையும் சமாளித்து, நிருவாக இயக்குனர்களும் செயற்குழுவும் வெற்றிப் பாதையில் ஏறுபோல் வீறுநடை போட்டார்கள். கட்டிடப் பொறுப்பை ஏற்று, அதிலேயே கண்ணும் கருத்துமாயிருந்தார் எங்கள் நிருவாகச் செயலாளர் L. சோமு அவர்கள்.

கோவை நகரத்தார்களின் முழு ஒத்துழைப்பும் வெளியூர் நகரத்தார்களின் பேராதரவும் பெற்றுக் கலை அழகுடன் பொலிவுற்று விளங்குகிறது சங்கக் கட்டிடம்.

அது உழைப்பிற்கு ஒரு சின்னம். உழைத்தவர்களுக்கு ஒரு மகிழ்ச்சி. ஒத்துழைப்பு நல்கியவர்களுக்கு ஒரு பூரிப்பு. அந்தப் பூரிப்பிலே திளைத்துத் தாமும் மகிழ்ந்து நடனமாடுவது போலிருக்கிறது சங்கக் கட்டிடத்தில் முகப்பில் கம்பீரமாக ஆனந்தத் தாண்டவத் தோற்றத்துடன் காட்சியளித்துக் கொண்டிருக்கும் நடராஜப் பெருமானின் வனப்புமிக்க உருவம்.

இந்த அற்புதமான கட்டிடத்தை, ஒன்றுபட்டு உழைத்து உருவாக்கித் தந்த அனைவருக்கும் நாம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம்.

வளர்க கோவை நகரத்தார் சங்கம்!

# பாடுவார் முத்தப்ப செட்டியார்

சித. நடராசன், M.A.

**அருட்கவி**

சிவமும் செந்தமிழும் தம் இரு கண்ணெனக்கொண்டு அவற்றைப் போற்றி வளர்த்துவரும் நம் நகரத்தார் பெருமக்களில் காலத்திற்கேற்றவாறு புரவலர்களும் புலவர்களும் ஆங்காங்கே தோன்றி சமயம், மொழி இவற்றைப் பேணிப் பாதுகாத்தும் வளர்த்தும் வந்திருக்கின்றுர்கள். அவர்களில் புலவராக —அருட்கவியாக மலர்ந்து சிறக்க வாழ்ந்தவர் நம் பாடுவார் முத்தப்ப செட்டியார் ஆவர்.

பாடுவார் வாழ்ந்த காலத்தில், பண்டமாற்றுச் செய்தும், நெல், பஞ்சு, உப்பு வியாபாரம் செய்தும் வணிகர்கள் வாழ்ந்திருந்தனர் என வரலாற்றின் மூலம் அறியப்படுகின்றது. திருவைந்தெழுத்துப் பதிகத்தின்கண்வரும் பாவலரின் அருள் வாக்கிற்கேற்பவே அவர்கள் பின்னர் கடல்கடந்து பன்னுடு சென்று பொருள் ஈட்டத் தலைப்பட்டனர். மிகுந்த பொருட்செல்வர்கள் ஆயினர்.

''யவனம் கலிங்கம் தமிழ் சிங்களம் யாண்டுமுள்ள
புவனமெலா மிவர்வர்த்தக மோங்கவும்''

என வரும் அடிகளால் இது புலப்படும். அன்றியும்

''மன்னர் பாங்கில் பின்னோர்'' எனத் தொல்காப்பியர் கூறியதற்கேற்ப மூவேந்தர் காலத்திற்குப்பின் இறையுறையும் ஆலயங்கள் பலவற்றை எடுப்பித்தவர்களும் பழையனவற்றைப் பெரும்பொருள் செய்து புதுப்பித்துக் குடநீராட்டிச் சிறந்தவர்களும் இவர்களேயாம் என்பதை இவர் பாடிய

''சிவனாலயமும் திருமால் பணியும் சிறப்புறத்தான்
நவமாய்ப் புதுக்கியும் ஆக்கியும்'' எனவரும் அடிகளாலும் உணரலாம்.

''காடு வெட்டிப் போட்டுக் கடியநிலந்திருத்தி
வீடுகட்டிக்கொண்டிருக்கும் வேள் வணிகர்'' —என்று தொடங்கும் பாடலை அறியாத நகரத்தார் இலர். திருமகளின் அருள்வேட்கும் இப் பாடல் அச்சிடப்பட்டு வணிகர் இல்லந்தோறும் தொழிலகங்கள் தோறும் ஆடியினுல் அழகு செய்யப்பட்டு மாட்டப்பட்டிருத்தலை யாண்டும் காணலாம்.

''இங்கிலீஷ்க் கொடி பறக்கவே
இளையாற்றக்குடி சிறக்கவே''

என வரும் சொற்றொடர்களால் அறியப்படும் நகரத்தார் வாழ்க்கையை வருமுன் கூறிய அவர் திறம் வியந்து பாராட்டத்தக்கது. ஆங்கிலேயர் ஆட்சிக்குமுன்பு, நிலையான அரசின்மையால் நிகழ்ந்த கலகங்களால் பாதிக்கப்பட்ட வணிக மக்கள், ஆங்கில அரசு எல்லாவிடத்தையும் தமது ஆட்சிக்கு உட்படுத்தி ஆளத் தொடங்கியபின்னர் நிலையான வாழ்க்கையைத் தொடங்கி வாணிபத்தைப் பெருக்கத் தலைப்பட்டனர். பின்னர் அண்மைக் காலம்வரை நகரத்தார் வாணிபம் வளர்ந்தோங்கிச் சிறந்திருந்தது. ஆங்கில அரசு அகன்றபின்பு, அயல்நாட்டுத் தொடர்புகள் குறைந்தபின்பு இன்றுள்ள நிலைமையையும் யாவரும் அறிவோம்.

இவண் 'இளையாற்றகுடி' என்றது ஆதியில் நகரத்தார் அனைத்துப் பிரிவினரையுமே உள்ளடக்கி வழங்கப்பட்டதாகும். பின்னரே 'இளையாற்றக்குடி, என்பது ஒரு கோயிலாரை மட்டும் குறிக்கத் தொடங்கியது.

**பிறப்பும், கல்வியும்**

திருமதுரைச் சிவப்பட்டி என வழங்கும் கீழச் சிவப்பட்டியில் நகரத்தார் மரபில் நேமங்கோயிலைச் சேர்ந்த திருவாளர் அழகப்பச் செட்டியார்—லெட்சுமி ஆச்சியின் ஒரே மைந்தனாக முத்தப்பர் பிறந்தார். இவர் காலம் பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியெனக் கொள்ளுதல் பொருந்தும். இவர் எழுதிய ''நடுவாற்று மருதம் பிள்ளையார்'' விருத்தத்தில் கர்னல் அக்நியூ மருது பாண்டியர் மேல் படையெடுத்த குறிப்பு காணப்படுகிறது. எனவே இவர்காலம் அதையொட்டிச் சமகாலம் என்றோ அதற்குப் பிற்காலம் என்றோ கருத இடம் இருக்கிறது.

இவர் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் பயின்று தமது பத்தாவது ஆண்டுக்குள் தனவணிகர் தொழிலுக்கு வேண்டிய கல்வியை முறைப்படி கற்று முடித்தார். நூற்பொருள்களை அறியும் ஆற்றலும் அரிய பாவன்மையும் இவருக்கு இளமையில் இயல்பாகவே அமைந்திருந்தன. திருக்குறள், அறநெறிச்சாரம், நீதிநெறி விளக்கம், நாலடியார் முதலான அறநூல்களையும் மற்றும் ஏனைய இலக்கிய நூல்கள், காவியங்கள், புராணங்கள் ஆகியவற்றையும் இவர் அரிதின் முயன்று படித்துத் தேர்ந்தார். இவருடைய இத்தகைய நூலறிவு பின்வரும் ஜெயங் கொண்டார் சதகச் சிறப்புரையால் அறியப்படுகின்றது. இப்பாயிரம் சுந்தர முதலியாரால் பாடப்பெற்றது.

''திருமதுரை சிவப்பட்டி இளையாதகுடிசெட்டி சிமான் என்னும்
உருமதனன் அழகப்பன் உதவிய முத்தையன் எனும் ஒப்பில்சிங்கம்
அறுமறைகள் சாத்திரங்கள் ஆகமங்கள் புராணங்கள் அனைத்தும் ஆய்ந்து
பெருகு பழமொழி நூறும் கதை நூறும் சதகம் எனப் பேசினனால்''

என்ற பாட்டானும், இவருடைய பெருந்தன்மையும் நற்குணமும் வெண்பாப் புலியார் சிறப்பித்துரைத்தவாறு,

''கற்றவர் கல்விக்கு உரையாணி! நீ தங்கக்கட்டி! நின்னைப்
பெற்றவளே செல்வப் பேறுள்ளதாய்! நின்பிதா முன்செய்த
நற்றவமே தவம்! நாட்டார் வணிகர்க்கோர் ரத்தினம் நீ!
கொற்றவரும் புகழ் முத்தப்ப பூப! குணரத்னமே!

என்ற பாட்டானும் அறியப்படும்.

கோயிலூரில் மடம் அமைத்தவரும் 'ஆண்டவர்' என்ற சிறப்புப் பெயர் பெற்றவருமான முத்துராமலிங்க அடிகள், கல்லாப்பேட்டை குறுநிலமன்னர் முத்து பாலுத்தேவர், நகரத்தாரின் ஞானசிரியரான பாதரக்குடி சேனபதி அடிகள், மிதிலைப்பட்டி வேலுக்கவிராயர், அழகிய சிற்றம்பலக் கவிராயர், வெண்பாபுலி வீர கவிராயர், செவ்வூர் அழகுப் புலவர், இராங்கியம் முத்துவீரப்பபிள்ளை, வேம்பத்தூர் மார்த்தாண்டப் புலவர் ஆகியோர் இவருடன் உறவாடி உரையாடி மகிழ்ந்த சமகாலத்துச் சான்றோர் ஆவர்.

**இல்வாழ்க்கை**

முத்தப்பர் உரிய வயதில் திருமணம் செய்யப்பெற்றார். இவருக்கு ஐந்து ஆண்மக்கள் உண்டு. இவர்களைப்பற்றி அடியிற்கண்ட அடுக்குத்தொடரை முத்தப்பர் நண்பர்களிடம் சொல்வது வழக்கம் என்று தெரிகிறது.

''சர்க்கரைக் கருப்பஞ்செட்டி;
சவ்வாது மெய்யன் செட்டி;
சீனி அளகன் செட்டி;
செவத்த ராமன் செட்டி;
எங்கும் பராபரம் ஏகப்ப செட்டி.''

இன்றும் இவர்களில் நால்வர் வழியிலே வந்த மக்கள் ஐந்தாவது தலைமுறையினர் நலமுடன் கீழச் சிவப்பட்டியின் கண் வாழ்ந்து வருகிறார்கள்.

**வாக்குப் பலிதம்**

இளமையிலேயே அருள் வாக்குப் பெற்ற இவருடைய சொற்கள் சொன்ன மாத்திரத்தில் பலித்தன என்பதும் மழையைப் பெய்விக்கவும் பெய்யும் மழையை நிறுத்தவும்ஆற்றலுடையவைகளாய்த் திகழ்ந்தன என்பதும் தெரிய வருகிறது.

இவர் ஒருமுறை அரியக்குடி சென்றிருந்தபோது சரியான வரவேற்பு கிடைக்கவில்லை. மனம் நொந்த முத்தப்பர்,

''அரியக்குடி நகரார் அத்தனைபேரத்தனையும்,'' என்று பாடத் தொடங்கினார். உடனே ஒருவர் ஓடிவந்து ''என்ன ஐயா! எப்போது வந்தீர்கள்; நம் வீட்டுக்கு வாருங்கள்'' என அழைத்தார். எனினும் எடுத்த பாட்டை முடிக்கவேண்டுமே என்ற கருத்தில்,

''அரியக்குடி நகரார் அத்தனை பேரத்தனையும்
வரிசைக்குடியாக வாழ்க''

என்று முடித்தார்.

மறுபடி பலர் வேண்டிக்கொண்டும் இதனை மாற்ற முடியவில்லை. இன்றளவும் அரியக்குடியில் ஒன்று போக ஒன்று நிறைந்து புள்ளி மிகாமலும் குறையாமலும் இருந்து வருகிறது. என்னே! புலவர் தம் சொல்லாற்றல்!



AR. L. V. நடராசன் செட்டியார்
சங்கத்தின் முதல் தலைவர்

## கோவை நகரத்தார் சங்கத்தின் முதல் செயற்குழு



நிற்பவர்கள் : SVN. நாகப்ப செட்டியார், KR. ஆண்டியப்ப செட்டியார், P. சுப்பிரமணியன், SM. KR. கருப்பன் செட்டியார்

உட்கார்ந்திருப்பவர்கள் : NKN. நாகப்ப செட்டியார், SM. ரெங்கநாதன், PLK. குப்பான் செட்டியார், AR. L. V. நடராசன் செட்டியார், AL. சிங்காரம் செட்டியார், AN. வெங்கிடாசலம் செட்டியார், RM. லெட்சுமணன்





உயர்திரு,
M. A. M. இராமசாமி அவர்கள்
ஷெரீபானதைப் பாராட்டி
கோவை நகரத்தார் சங்கம்
அளித்த பாராட்டு
விழாவிலிருந்து
சில காட்சிகள்



### பெய்யெனப் பெய்யும் மழை

ஒருமுறை உழவர்களுக்கோர் இடுக்கண் வந்துற்றது. மழையின்மை யால் பயிர்கள் வாடின. மக்கள் தவித்தனர். கதிரவனின் வெம்மை தாள முடியாத அப்பகுதி மக்கள் முத்தப்பரிடம் வந்து முறையிட்டுக்கொண்டனர். முத்தப்பர் அவர்களுக்கு ஆறுதல் கூறி அடுத்துள்ள காட்டுக்கருப்பர் கோயிலுக்கு அழைத்துச் சென்ருர். அவருடைய கருணை உள்ளம் உருகி கருப்பர் முன் பாட்டாய் மலர்ந்தது.

''ஆட்டைக் கவர்ந்தவரை ஆட்டினுய்முன் பெனது
பாட்டுக்கிரங்கியருள் பாலிப்பாய்! வாட்டமுறு
நாட்டுப் பயல்கள் நலமுற்று வாழ்ந்திடவே
காட்டுக் கருப்ப! மழை காட்டு!''

பாட்டு முடியும் தருவாயில் வானத்தில் கருமேகம் அடர்ந்தது. மின்னல் ஒளிவிட்டது. அன்றிரவு நாடு தழைக்க நல்ல மழை பெய்தது.

இந்நிகழ்ச்சி மாத்திரமன்று. பாதரக்குடி சேனுபதி அடிகள் முயற்சி யினுல் தன வணிக மக்கள் குன்றக்குடி வேலவருக்கு ஒரு வெள்ளி மயில் வாகனம் செய்து வைத்தனர். நல்லதோர் நாளிலே அதன் ''வெள்ளோட்டம்'' நடை பெற்றது. அவ்வமையம் சேனுபதியாரும் பாடுவாரும் முன்வரிசையில் நடந்து செல்கிருர்கள். சேனுபதியார் கேட்கிருர் ''முத்தப்பா! ஊரில் மழையில்லையே! நீ ஒரு பாட்டுப்பாடி மழை பெய்யச் செய்கிருயா?'' என்று. முத்தப்பரும் அதற்கு உடன்பட்டு தெற்கு வீதியில் உள்ள மடத்தில் சுவாமியை இறக்கி வைத்ததும் பாடுகிருர்.

''அள்ளி நிதியங் கொடுக்கும் புனல்வயற்
சேனுபதி என்ஜயன் குன்றை
வள்ளிமணவாளனுக்கு வெள்ளிமயில்
செய்துவைத்த மகிமை பாரீர்!
வெள்ளி அறியாமல் மழை பெய்கிறதே
என்ற மொழி மெய்தான்; வெள்ளிப்
புள்ளி மயிலேறி முருகன் பவனி வரக்
கண்டு பொழிந்தவாரே!

உடனே மீன் பூத்தது பூத்தபடியிருக்க மழை கொட்டத் தொடங்கி விட்டது. நெடுநேரமாகியும் நிற்கவில்லை. பின்னர் சேனுபதியாரின் வேண்டு கோட்கிணங்கி முத்தப்பர் மழை நிற்கப் பாடுகின்ருர்.

''வந்து மழைபொழியும் வானே! வெஞ்சூர் தடிந்த
கந்தர் திருவிழாக் காலத்தில்—தொந்தரையாய்
நீர்த்துளியை ஊற்றிவிடல் நேர்த்தியல; மாற்றிவிடு
கீர்த்திவரும் நாட்டன் மொழிகேள்!

பாட்டும் முடிந்தது. மழையும் நின்றது. அருட்கவியின் ஆணையினை இங்கு காண் கின்ருேம்.

### வேலன் வெற்றிலை பாக்களித்த விந்தை

சிக்கல் திருவிழாவின்போது சிங்கார வேலனைத் தரிசிக்க தக்க நண்பர்களான முத்துராமலிங்க இறைவருடனும் சேனாபதியாருடனும் முத்தப்பர் ஒருமுறை சிக்கல் சென்று மடத்தில் தங்கியிருந்தார். அறிஞர்கள் ஒன்றுகூடினால் அளவிலாது உரையாடிக் களிப்பெய்துதல் இயல்புதானே! நடுநிசியானது; நண்பர்கள் உரையாடல் தொடர்ந்தது; உறக்கம் வர மறுத்தது; பெருமழையும் பெய்தது. இறைவரோ அடிக்கடி வெற்றிலைபாக்குப் போடுபவர். இருந்த கைச்சரக்கு தீர்ந்துவிட்டது. என்ன செய்வார்?''முத்தப்பா, வெற்றிலையும் பாக்கும் வேண்டும் இப்போது, வேலவன் மீது பாடி வரவழைத்துத்தா!'' என்றார். உடனே பாடல் எழுந்தது.

''குத்துவார் வெட்டுவார் கோடிபெறுவார் நின்பால்
பத்தல்ல எட்டல்ல பஞ்சமில்லை—இத்தனைதான்
வெற்றிலையும் பாக்கும் விரும்பினேன்; சிக்கலின்கண்
உற்றிருக்கும் வேலா உதவு!

பாடல் முடிந்தது. கதவு தட்டும் ஓசை கேட்டுத் திறந்தனர். வெற்றிலை பாக்கு முதலியவற்றை கோயில் தட்டில் ஏந்திக்கொண்டு சிறுமி ஒருத்தி நின்றாள். ''குருக்கள் ஐயா கொடுக்கச் சொன்னார்கள்'' எனச் சொல்லிக்கொடுத்துவிட்டு மறைந்தாள். அன்று இரவே குருக்கள் கனவில் ''கோயில்தட்டு மடத்தில் முத்தப்பனிடம் உள்ளது. பெற்றுக்கொள்ளவும்'' என்று வாக்கு கேட்டது. மறுநாள் குருக்கள் மூலம் செய்தியறிந்த மக்கள் முத்தப்பரின் பெருமையைப் பேசத் தொடங்கினர்.

### வெண்பாப்புலி வீட்டுப்புலியான கதை

இதே போன்று முத்தப்பரின் சொல்லாற்றலை அருட்திறத்தை வெண்பாப்புலியுடன் இவர் வாதிட்ட சமயத்திலும் அறிய நேர்கின்றது. வேலுக் கவிராயர் வீட்டுக் கடாத்தலை வெடிக்க வெண்பாப்புலி பாடுகிறார். வெடித்ததலை ஒன்று சேர அருட்கவி ஆணையிடுகிறார். உயிர் பெற்ற ஆட்டுக்கடா வெண்பாப் புலியின் மீது பாய்கின்றது. அவர் அஞ்சி விலகியோடுகிறார். அதனைக் கண்டு நகைத்த முத்தப்பர்,

''பாட்டுக்குப் புலி பயந்து பதுங்கியதும் போதாமல்
ஆட்டுக்கும் புலி பயந்தால் ஆர்தாம் நகையார்கள்?

என்றுகூற உடனிருந்த வேலுக் கவிராயர்,

''காட்டுப்புலியதுபோல் கவிபுகலும் நும்மிடத்தோர்
வீட்டுப்புலியானார்; வெண்பாப் புலியானார்''.

என்று பாட்டை முடித்துக் கூறுகிறார். இதனால் தம் கர்வம் அடங்கப்பெற்ற வெண்பாப்புலியார் முத்தப்பரின் வேண்டுகோளுக்கிணங்கத் தமக்கு அடிமைப் பட்டிருந்த புலவர்களையெலாம் விடுவித்து, முத்தப்பரையும் வாழ்த்தி அவரை இணைபிரியாத நண்பராக்கிக்கொண்டார் என வரலாறு பேசப்படுகின்றது.

### செய்யுள் மருத்துவர்

முத்தப்பரை அவரது நாற்பதாவது ஆண்டிலே மேகநோய் அணுகியது. நோயினல் நலிவுற்ற முத்தப்பர் சிரணிப்பட்டிக்குச் சென்று அங்கு கோயில் கொண்டுள்ள முத்துமாரியம்மனை வழிபட்டு அன்னையின் திருமுன்பு தோத்திரப் பாடல்கள் பாடி மூன்று நாட்கள் உண்ணு நோன்பு இருந்தார். மூன்ரும் நாள் இரவில் அன்னை அவர்தம் கனவில் தோன்றி, ''முத்தப்பா, கண்டரமாணிக்கத்தை (கொங்கரத்தி) அடுத்த நடுவாற்று மருதம்பிள்ளையார் கோயிலுக்குச் சென்று பத்துநாள் நோன்பிரு. நோய் நீங்கி நலம் எய்துவாய்'' என நவின்ருர். தெய்வத் திருவாக்கினைத் தலைமேற்கொண்டு முத்தப்பர் உடனே கொங்கரத்தியினை அடுத்த நடுவாற்று மருதம்பிள்ளையார் கோயிலுக்குச் சென்று நாளுக்கொரு பாடலாகப் பாடி ஆனை முகத்தானின் அடிபணிந்து தொழுதிருந்தார். பத்து நாட்களில் நோய் முழுதும் நீங்கப் பெற்று உடல் நலம் பெற்றுத்திகழ்ந்தார்.

இங்ஙனமே இவரது உற்ற நட்பினரான சேஞபதி அடிகள் பழநிக்குச் சென்றிருந்தபோது வயிற்றுப்போக்கு நோயினல் துன்புற்று மெலிந்தார். அவ்வமயம் உடனிருந்த பாடுவார் அவர்களைக் கையமர்த்தி 'கவலற்க' எனக்கூறி பழநியாண்டவர் பேரிலும் குன்றக்குடி முருகன் பேரிலும் பத்துப்பத்துப் பாடல்கள் பாடி இறைவனை வணங்கித் திருநீறிட்டார். உடனே சேஞபதியாரின் நோய் முற்றும் நீங்கிவிட்டது எனவும் அறிகிருேம். இங்ஙனம் செய்யுள் மருத்துவராகவும் நம் முத்தப்பர் திகழ்ந்தார்.

### முத்தப்பர் நூல்கள்

நேம நகரிலுள்ள ஜெயங்கொண்ட நாதரைத் தலைவராகக்கொண்டு பாடிய 'ஜெயங்கொண்டார் சதகம்', எழுநகரத்தார் பெயரால் பாடிய ,'திருமுருக விலாசம்', 'உச்சினி மாகாளியம்மன் கும்மி', 'தல்லாகுளம் கருப்பர் அகவல், முதலியன இவர் இயற்றிய நூல்களாகும். இவற்றில் முதலிரண்டும் அச்சிடப் பெற்று வெளிவந்துள்ளன. எனினும் மறுபதிப்பு வெளிவருதல் அவசியமாகும். ஏனைய இரண்டும் அச்சேறியுள்ளன என அறியப்பட்டபோதிலும் நூல்கள் கிடைக்கப்பெறவில்லை.

### ஜெயங்கொண்டார் சதகம்

இந்நூல் நேமத்திறைவஞன ஜெயங்கொண்ட நாதரைத் .தலைவஞகக் கொண்டு எளிய சொற்களால் ஆக்கப்பெற்று ஆசிரியவிருத்தப்பாவான் அமைந்த நூறு பாடல்களைக்கொண்டது. சொற்சிலம்பமாடி மக்களை மயங்க வைக்காது, நூறுகதைகளையும் அவற்ருல் உணரப்படும் பழமொழிகளை அல்லது நீதிகளைத் திரட்டி ஒவ்வொன்ருகப் பாடியிருப்பது எளியோரும் படித்து இன்புறத்தக்க தாகும். பாரதம், இராமாயணம், திருவிளையாடற்புராணம், பெரியபுராணம், நளன் கதை, நால்வர் கதை, வான்மீகர் கதை, வாமனன் கதை, இரணியன், ஆகிய பல கதை நிகழ்ச்சிகளும் இதன்கண் பேசப்படுகின்றன.

தைத்திங்கள் முதல் நாளிலே நேமங் கோயிலின் கண் நேம நகரத்தார் களும் மற்றும் முன் கூறப்பட்ட இவரின் நண்பர்களும் குழுமியிருக்க இந்நூல் அரங்கேற்றப்பட்டது. அவ்வமயம் இவர் பாடியுள்ள 'திருவைந்தெழுத்துப் பதிகம்' ஐந்தும் நகரத்தார் நல்வாழ்வையே குறிக்கோளாகக்கொண்டு பாடப் பட்டதாகும்.

## திருமுகவிலாசம்

திருமுகவிலாசம் என்னும் நூல் தூதுவகைப் பிரபந்தங்களுள் ஒன்ருக அமைத்துக்கொள்ளப்படும் கலிவெண்பாவினுல் அமைந்தது.

இதன்கண், குன்றக்குடி முருகன் தன்னை நாடிவந்து பொருள்கேட்ட பண்டாரத்துக்கு நகரத்தார் வரலாற்றினையும் புகழையும் வறியார்க் கொன்றீயும் வண்மையையும் புகழ்ந்து சொல்லி அவ்வமயம் கொத்தமங்கலம் நகரத்தில் கூடியிருக்கும் நகரக்கூட்டத்திற்குச் சென்று தான் தரும் திருமுகத்தினைக்கொடுத்து வேண்டளவும் பொருள் பெற்றுச் செல்லுமாறு வழிப்படுத்தியதன் இனிய வரலாறு கூறப்படுகின்றது.

அக்காலத்துப் புலவர்களின் அவலநிலையும், அவர்க்கொன்றீயாச் செல்வர்களின் சிந்தையும் ஆசிரியன் அதனை நயமொடு கிளத்தலும் நகரத்தார் வரலாற்றுச் செய்திகளும் இதன்கண் காணக்கிடக்கின்றன.

புவிக்குளொரு

பாக்குக்கும் வெற்றிலைக்கும்
பாவிகளைச் சொற்புகலச்
சாக்குக்கும் பாடிச்
சலிப்பாகி நாக்குலர்ந்து
ஏடும் புண்ணுகி
யெழுத்தாணி யுந்தேய்ந்து
பாடு மனமும்
பரதவித்தே—யேடெழுதிச்
சுண்டுவிரலு லுங்காய்த்துத்
தொண்டைக் கம்மல் பாடியதாற்
கண்டதல்லா லோர் பலனுங்
கண்டிலேன்''

என்பதனுல் இதனை அறியலாம்.

இனி, இவையல்லாது முத்தப்பரின் தனிப்பாடல்களும், சீட்டுக்கவிகளும், ரேணிப்பட்டி முத்துமாரியம்மன்மேல் பாடிய பாடல்களும், நடுவாற்று மருதம் பிள்ளையார் பாடல்களும், குன்றக்குடி முருகன்மேற் பாடியவையும், பழநியாண்டவரைப்பாடி பரவினவும் இவர்தம் வரலாற்றுடன் தொகுத்து வெளியிடுதல் இன்றியமையாது வேண்டப்படும் நற்செயலாகும். நனவிலும் கனவிலும் நகரத்தார்களின் நலத்தில் தம் அகத்தைச் செலுத்திச் செய்யுட்கள் எழுதிப்போற்றிய இவ்வித்தகரின் பாடல்கள் எல்லாம் எவ்விடத்தில் இருப்பினும் வெளிப்படுத்தல் வேண்டும். அதற்குத் தன வணிகர்கள் முயன்று பயன் எய்துவார்களாக!

—திருச்சிற்றம்பலம்

# முதுபெரும்புலவர் பண்டிதமணி

T. மீனாட்சி, (B Sc.) "கதிர்மணி" கோவை



தமிழ்மொழி தனிப்பெருஞ் செம்மொழி. வையகம் போற்றும் வளர் மொழி. தமிழால் வாழ்ந்தோர் பலர். தமிழை வாழ்வித்தோர் பலர். வளர்த்தோர் பலர். தேனினும் இனிய செந்தமிழினை வளர்த்த புலவருள் தம் குலம் தழைக்க, நாடு செழிக்க, மொழி சிறக்க, சென்ற நூற்றாண்டின் இறுதியில் தோன்றி இந்த நூற்றாண்டில் வாழ்ந்தவரும், 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்றுரைத்த தென்றமிழ்ப் புலவன் கணியன் பூங்குன்றன் தோன்றிய பெருமை மிக்க மகிபாலநகரில், தனவணிகர் குலத்தில் தோன்றியவருமான மு. கதிரேசச் செட்டியார் அவர்களும் ஒருவராவர். இவர் முதுபெரும் புலவர். தமிழ் மொழியில் மட்டுமின்றி வடமொழியிலும் பாண்டித்தியம் பெற்று இருமொழிப் புலவராகத் திகழ்ந்தவர். பண்டிதமணி என்னும் பட்டம் பெற்றவர். இவர் தமிழகத்திலேயே முதன்முதலில் மகாமகோபாத்தியாயா என்னும் பட்டத்தினைப் பெற்ற முதல் தமிழர் ஆவர். இத்தகு புலவர் நம் குலத்தில் தோன்றியது நம் மரபினர் செய்த பெரும்பேறாகும்.

திரைகடல் ஓடித் திரவியம் தேடும் நாட்டுக்கோட்டை நகரத்தார் மரபில் தோன்றிய இவர் தம் மரபுத்தொழிலில் நாட்டம் கொள்ளாது இளமையி லேயே அறிவுத்துறையில் ஈடுபட்டுச் சிறப்படைந்தவர். இளமைப் பருவத்தில் முறைப்படி பள்ளியில் பயிலாமல், இவரது நடக்கவியலாத நலிவுற்ற காலோடு ஆசிரியர் துணையின்றி தாமாகவே நூல்கள் பலவற்றைக் கற்றுப் பொருள் புரிந்து

கொள்ளும்படியான தமிழன்னையின் அருளைப் பெற்றவராக விளங்கினர். பெருமை மிகு வள்ளல் இராசாசர் அண்ணாமலையார் அவர்களின் அரிய முயற்சியால் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பதவியேற்று பண்டிதமணியவர்கள் ஆற்றிய தொண்டு அளவிடற்கரியது.

பண்டிதமணியவர்கள் நகைச்சுவைபடப் பேசுவதில் வல்லவராக இருந்தார்கள்.

''கேட்டார் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல்''

என்னும் பொய்யாமொழிப்புலவரின் வாக்கிற்கிணங்க இவரது சொற்கள் தான் பேசும்போது கேட்டுக்கொண்டிருக்கும் பலரைத் தன்பால் இழுக்கும் தன்மைத் தாயும், கேளாத பலரும் கேட்கவேண்டும் என்று அவா கொள்ளக்கூடியதாகவும் இருந்தது. பண்டிதமணி அவர்கள் குளிர்ந்த உள்ளமுடையவர்கள். இதைக்கூறுமிடத்து சென்னை சைவ சித்தாந்தப் பெருங்கழகத்து அமைச்சராய் இருந்த திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் பி. ஏ. பி. எல். அவர்கள் கூறுவதாவது:

''சிரிப்பார் களிப்பார் தேனிப்பார்; சிரிப்பும் களிப்பும் தேனிப்பும் எல்லோருக்கும் வரமாட்டா. உள்ளங்குளிர்ந்து உவகையெய்திப் பூரித்தாலன்றி உண்மையான சிரிப்பும் களிப்புமில்லை. நிரம்பிய புலமையும், மெய்யன்பும், உள்ளுணர்வும், புரவலரை நாடிச் சென்றடையாத திருவும், அமரருள் உய்க்கும் அடக்கமும் வாய்க்கப்பெற்ற ஒருவருடைய உள்ளமே வெதுப்புதலின்றி எஞ்ஞான்றும் குளிர்ந்திருக்கும்; இயல்பாகவே பூரிக்கும் தன்மையுடையதாயிருக்கும். அத்தகைய குளிர்ந்த உள்ளமுடையவர்கள் ஒருசிலரே இப்போது இத்தமிழ் நாட்டிலுள்ளார். அவர்களுள் ஒருவர் நம் பண்டிதமணி கதிரேசனாரவர்கள்.''

இவ்வாறு கல்வி கேள்விகளில் சிறப்புப் பெற்றுப் பலராலும் பாராட்டப் பெற்ற பண்டிதமணி அவர்களின் இல்வாழ்க்கையும் இனிதே அமைந்திருந்தது. இவரது வாழ்க்கைத் துணைவி எல்லா நற்குண நலன்களும் ஒருங்கே அமையப் பெற்ற மீனாட்சி ஆச்சி ஆவார்கள். இவர்கள், வீட்டிற்கு வந்தோரை விருந்தோம்பி உபசரிக்கும் நல்லன்னையாக விளங்கியதோடு தன் கணவருக்கு எல்லா விதத்திலும் உறுதுணையாக இருந்து வந்தார்கள்.

பொருட்செல்வத்தில் சிறந்தவர்கள் பலர் நம்மவரில் இருந்தகாலத்தில் சொற்செல்வத்தில் தலைசிறந்தவராக விளங்கியவர் கதிரேசனார். பண்டிதமணி அவர்கள் நம் குலத்தில் தோன்றியது நம்மவர் பெருமைப்படத்தக்கதொன்றாகும். இவ்வாறு தமிழர் பண்பாட்டை மறவாமல், தமிழர் நெறி சிறக்கப் பாடுபட்டுத் தாய்மொழியின்பால் நீங்காப் பேரன்புகொண்ட பண்டிதமணி அவர்களின் திருஉருவம் சிலைவடிவில், தமிழ்காக்கும் நம் தமிழக அரசின் ஆதரவால், அவர்களது பிறப்பிடமாக மகிபாலன்பட்டியில் அண்மையில் நிறுவப்பட்டுள்ளது. இது நம் எதிர்காலத் தலைமுறையினருக்குப் பண்டிதமணி அவர்களின் சிறப்பையும், குறிப்பாக தமிழின் சிறப்பையும், உயர்வையும் எடுத்துக்காட்டும் சின்னமாக விளங்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

# கட்டடத்தின் வளர்ச்சியும் அதன் விவரங்களும்

L. சோமு

*நிர்வாகச் செயலாளர்*

இறைவன் திருவருளாலும் நகரத்தார் நலம் காக்கும் ராஜா. சர். மு. அ. முத்தையா செட்டியார் அவர்களின் பேராதரவாலும் கொடை உள்ளத்தாலும் ஆர்வத்தோடு அள்ளி அள்ளித் தந்த கோவை நகரத்தார்களின் நல்ல எண்ணத் தாலும் பல இளைஞர்களின் பெரும் முயற்சியினாலும் உருவாக்கப்பட்டதே இன்று அழகுடன் காட்சிதரும் கோவை நகரத்தார் சங்கத்தின் கட்டிடம்.

கோயமுத்தூர் நகரத்தார் சங்கத்துக்காக கட்டிடம் ஒன்று கட்ட வேண்டும் என்ற முயற்சி பல ஆண்டுகளுக்கு முன்பு மேற்கொள்ளப்பட்ட போதிலும் அதனைச் செயலாக்க முற்பட்டபொழுது பல சிரமங்களும், இன்னல் களும் இருந்து வந்தன. முயற்சிகள் தொடர்ந்து மேற்கொள்ளப்படாததாலும் ஒருசிலரிடமே திரும்பத் திரும்ப நிதிவசூல் செய்யவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்ட தாலும் மறுபடி நிதி வசூலுக்குக் கூடப் போக இயலாத அளவு முயற்சிகள் தளர் வடைந்தன. அந்த நேரத்தில் நடைபெற்றதே மூன்றாவது பேரவைக்கூட்டம் (9—1—1972). அதில் எங்களிடம் பொறுப்புகள் ஒப்புவிக்கப்பட்டது. அத்துடன் புதிதாக ஒரு கட்டிடம் கட்டவோ அல்லது வாங்கவோ நகரத்தார் பெருமக்களிடம் 6% வட்டிக்கு தொகைகள் கடன் பெறுவது என்ற திட்டத்தை யும் வகுத்தது.

சோர்வு கொஞ்சம் அகன்று தெம்புக்கு இடம் கொடுத்தது. 15—8—72 தேதி நடைபெற்ற மூன்றாவது செயற்குழுக் கூட்டத்தில் ஒன்பது பேர்கள் நீண்டநாள் தவணைக்கு கடனாக தொகைகள் தர அந்த இடத்திலேயே ஒப்புதல் தந்தார்கள். திரு ராம. மு. சோம. முத்தப்ப செட்டியார் அவர்கள் எழுதிய தொகையைப் பையிலிருந்து உடனே எடுத்து தந்தது புதிய உற்சாகத்தை ஊட்டி எங்களை வீறு கொண்டு எழச் செய்தது.

உற்சாகம் கரைபுரண்டு ஓட, கார்கள் பறந்தன. கையில் பையுடன் சிந்தனைச் செல்வர் எங்கள் தலைவர் கரு. அவர்களும், நிறைந்த ஆர்வத்துடன் மா. அவர்களும், வாதத் திறமையுடன் சிவ. அவர்களும் பொறுமையின் சிகரமான சோம. ரெங்கநாதன் அவர்களும் தெளிவான முடிவெடுக்கும் முத்தப்பர் அவர் களும், உற்சாகம் தளராது ஊக்கிக்கொண்டிருக்கும் மயில்மனை ராம. அவர்களும், தளராது உழைக்கும் நாக. அவர்களும், திருக்குறள் உவமானம் தரும் திரு. ஆத. சிங்காரஞ் செட்டியார் அவர்களும் அயராது உழைக்கும் முத்துவீரப்பன் அவர்களும் அள்ளி அள்ளித் தந்த கோவை நகரத்தார்களும்.........ஆஹா!

அந்த நாட்களை மறக்க முடியுமா? 15, 20 நாட்களில் முப்பதாயிரம் ரூபாய் கிடைக்கும் அளவு ஏற்பாடு செய்துகொண்டோம். 10—9—1972 தேதி அடிக்கல் நாட்டப்பட்டது. நமக்கு இடம் வாங்கித் தந்த இரண்டாவது செயற் குழுவினர்களும் அதன் செயலாளர்களான N. K. N. நாகப்ப செட்டியார் அவர் களுக்கும் S.V.N. நாகப்பச் செட்டியார் அவர்களுக்கும் நல்லோர் நெஞ்செலாம் நன்றி உரைத்தன.

அடுத்து கட்டிட வேலைகள் துவக்கப்பட்டன. துவக்கவிழாவில் கொடை உள்ளம் கொண்ட திரு AL. சிங்காரம் செட்டியார் அவர்களும், K.RM. K.M. குமரப்பச் செட்டியார் அவர்களும் தாங்கள் கடனாகக் கொடுத்த தொகைகளை நன்கொடையாகவே வைத்துக்கொள்ளும்படி சொன்னார்கள். நல்லதற்கு முன் னோடி நாம் என்று காட்டிவிட்டார்கள். பொது ஸ்தாபனமாக இருப்பதால் அனுமதி பெறுவதிலும் சிமிண்டு தட்டுப்பாட்டினாலும் கட்டிடம் உருவாக்குவ வதிலும் தாமதம் ஏற்பட்டது.

கட்டிட வேலைகளுக்காக கோவை வாழ் நகரத்தார்களிடம் எந்த உதவி கோரிப் போனாலும் மனந்தளராது முகம் கோணாது இல்லையெனாது உதவிகள் செய்து வந்தார்கள். சங்கக் கட்டிடத்தை உருவாக்குவதில் சங்கத் தலைவர் SM.KR. கருப்பஞ் செட்டியார் அவர்களும் பொதுச் செயலாளர் S.M. ரெங்கனாதன் அவர்களும் உறுதுணையாக இருந்து வந்தார்கள். வாடிய பயிரைக் காணுந் தோறும் என் உள்ளம் வாடியது என்று சொன்ன வள்ளலார் வழி நிற்கும் திரு. AL. சிங்காரம் செட்டியார்அவர்கள், சங்கம் களைத்த போதெல்லாம் உறுதுணை நின்றார்கள். எனக்கு வழிகாட்டுவதில் தந்தையும் ஆனார்கள். அதிகம் பேசாது காரியங்களைச் செய்யும் காசிநாத் நாகப்பன், உழைப்புக்கு அஞ்சாத புருக்பாண்ட் அண, காட்டூர் அடைக்கப்ப செட்டியார், செயல் வீரர்கள் சேக்கப்பா டயர்ஸ் சேக்கப்பன், மீனாட்சி ஆட்டோ ஸ்டோர்ஸ் ராமசாமி அண்ணன் ஆகியோரின் தக்க சமயத்து ஒத்துழைப்பை மறக்க முடியுமா? ஆர்வத்தோடு தந்த ஏகப்பன் அவர்களையும், தானும் தந்து, சேர்த்தும் தந்த மாணிக்கம் ஸ்டோர்ஸ் மாணிக்கம் அவர்களையும் மறக்க முடியுமா? அவ்வப் போது பல உதவிகளைச் செய்த சௌத் இந்தியா கார்ப்பொரேஷன் RM. ரங்கனாதன் செட்டியார் அவர்களையும், L. சண்முகம் செட்டியார் அவர்களையும் போற்றாமல் இருக்கமுடியுமா?

அஞ்சேல் என்று உற்சாகம் தந்த சிதம்பரம் ஆட்டோமொபைல்ஸ் சித. அவர்களையும், சிரித்த முகத்துடன் வேண்டிய உதவிகளைச் செய்த மெய்யப்பா ஆட்டோமொபைல்ஸ் மெய்யப்பன் அவர்களையும், சாந்தி பைனான்ஸ் அழகப்பன் அவர்களையும் வாழ்த்தாமல் இருக்க முடியுமா?

கட்டிடத் திறப்புவிழாவில் வெளியிடவிருக்கும் சிறப்பு மலருக்குநிதி உதவி விளம்பரங்கள் அளித்த கோவை, சென்னை, மதுரை, சேலம் நகரத்தார் களுக்கும், தமிழக மக்களுக்கும் மிக்க நன்றி. மலர்க்குழு வேலைகள் காட்டு வெள்ளம்போல் ஆர்வப் பெருக்கோடு நடைபெற்றதனை மறக்க இயலாது. குழுத் தலைவர் வக்கீல் தியாகராஜன் அவர்களையும்; AL. S. அழகப்பன் அவர் களையும் AR. K. ராமநாதன் அவர்களையும் AR. முத்துவீரப்பன் அவர்களையும்



## "ராணி மெய்யம்மை ஆச்சி"

அவர்களின் நினைவாக நமது நகரத்தார் சங்கக் கட்டிடத்திலுள்ள மாடி ஹாலுக்கு "ராணி மெய்யம்மை ஆச்சி ஹால்" எனப் பெயரிட்டுள்ளோம் என்பதை மகிழ்வுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

செட்டிப் பெருமக்கள்
சிறப்போங்கக் கட்டுவித்த
கட்டிடத்தை ராஜா
களிப்புடனே திறந்து வைத்தார்





ராணி மெய்யம்மை
ராசியான பேரை
மாடி ஹாலுக்கு
மகிழ்வுடனே சூட்டுகின்றேம்



தம்பி. சித. நடராஜன் அவர்களையும் தொகுப்பு வேலைகளில் முழு மூச்சுடன் ஈடுபட்டு அருமையாக உழைத்த RL. சாத்தப்பன் அவர்களையும் வாழ்த்துகிறேன். வாழ்த்துகிறேன் என்பதிலிருந்தே அவர்கள் அத்தனைபேரும் ஆர்வமிகு இளைஞர் கள்-நமது சங்கத்தின் வருங்காலத் தலைவர்கள் என்பது தெரிந்திருக்கும்.

அமைதியுடன் அனுபவமிக்க SM. R. முருகப்பச் செட்டியார் அவர்களும் கோவை நகரத்தார்களுக்காக மிகவும் உழைத்த ஜெயா பார்மசி ஆண்டியப்பன் அவர்களும், கலையுலகு கலைமகள் ராமனாதன் அவர்களும், ஊக்கமிகு SE.SV. நாராயணன் அவர்களும் செய்துவரும் உதவிகள் சிறப்பு மிக்கது.

இறுதியாக ஆயின் இன்றியமையாத பணி, விழாவிற்கு வந்து வாழ்த்தும் நம்மவர்கள் அனைவருக்கும், உணவழித்து உபசரிப்பதாகும். அப்பணியினை ஏற்றுக்கொண்டு அயராது உழைக்கும் ஆற்றல் மிக்க மணி அவர்களையும், பெய ரிலும் ஆற்றலிலும் அமைதி காத்தலிலும் ஜெயங்கொண்டான் அவர்களையும் அவர்கள்தம் அருங்குழுவினரையும் பாராட்டக் கடமைப்பட்டுள்ளோம்.

10—11—74 செயற்குழுக் கூட்டத்தில் கடனாகக் கொடுத்த தொகை களை பெருத்த மகிழ்ச்சியுடன் ஆரவாரத்திற்கிடையே நன்கொடையாக அறிவித்த 13 நகரத்தார்களுக்கும் நம் நன்றி உரித்தாகுக.

இந்தக் கட்டுரை எழுதிக்கொண்டிருக்கும் போது கோவை நகரத்தார் கள் முழு மூச்சுடன் திறப்புவிழா வேலைகளில் ஈடுபட்டுக்கொண்டிருப்பதை வர்ணிக்க வார்த்தைகளே இல்லை.

## கட்டிட விவரங்கள்

இடம்: கோயமுத்தூர் R.S. புரம் கௌலி பிரவுன் ரோட்டில் இருக்கிறது.

இடத்தின் அளவுகள்:

தெற்கு வடக்கு 170 அடி,
கிழமேற்கு 49 அடி
8355 சதுரஅடி
19 சென்ட், 59 சதுர அடியும்
கிரயத் தொகை ரூ. 30,400-00.
இடம் வாங்கிய தேதி: 16—5—1968

கட்டிட பிளான்:

இன்ஜினியர் திரு. M. சுப்பிரமணியம் அவர்கள்
99, ராஜ வீதி,
கோவை-1.

நன்றி

கட்டிட முன்எலிவேஷன்:

இன்ஜினியர் திரு. K. N. சீனிவாசன் அவர்கள்
ஆர்க்கிடெக்ட் நன்றி.
12, சொக்கலிங்கம் நகர்,
சென்னை 86.

கட்டிட மேற்பார்வை:

இன்ஜினியர் திரு. P. D. வர்க்கீஸ் அவர்கள்
223- A., D. B. ரோடு, நன்றி.
ஆர். எஸ். புரம்.
கோவை-2.

அமைப்பு:—

முன்புறம் மூன்று கடைகளும், அதன்பின் ஒரு ஹாலும் இருக்கிறது. ஒவ்வொரு கடையின் அளவும் சுமார் $10\frac{3}{4}' \times 16'$ இருக்கிறது. அதன் பின்புறம் உள்ள ஹாலும் $32 \times 16'$ இருக்கிறது. முன்புறம் கடைகளும், ஹாலும்உயரம் 11 அடி. இவைகள் அனைத்துக்கும் தனித்தனியாக பாதைகள் இருக்கிறது. இப் போர்ஷனிலும் சங்க வருமானத்திற்காக அமைக்கப்பட்டிருக்கிறது.

மாடி:

சுமார் $33' \times 33'$ சைசில் எந்தவிதமான தூண்களும் இல்லாது ஒரே ஹாலாக அமைந்திருக்கிறது. அந்த ஹாலைச் சுற்றி மூன்று புறமும் $3\frac{3}{4}'$ அகலத்தில் வராண்டா இருக்கிறது.

ஹாலுக்குக் கிழக்குப்பக்க வராண்டாவில் 48 சதுரஅடி கொண்ட ஒரு ஸ்டோர் ரூம் இருக்கிறது. ஹாலுக்கு மேற்குப்பக்கம் 48 சதுர அடிகொண்ட லெட்ரின் பாத்ரூம், பைப் வசதியுடன் அமைந்திருக்கிறது. மாடிப்போர்ஷனும் சங்க உபயோகத்துக்கு ஏதுவாக அமைக்கப்பட்டிருக்கிறது. கட்டிடத்தின் மொத்த சதுர அடி 2493, ஹாலின் உயரம் $10\frac{3}{4}'$ அடி. பின்புறம் கட்டவிருக்கும் ஆஸ்பெஸ்டாஸ் ஹாலின் அகலம்30 அடி, நீளம் 75 அடி.

சிறப்புக்கள்:

மொஸைக்தரை, தேக்கு மரத்தில் நிலை, சன்னல்கள், பக்காவான R.C. கட்டிடம்.

கட்டிட மேஸ்திரி:

திரு. சி. ஆர். ராஜன், கங்குவார் லேன், ஆர். ஜி. தெரு, கோவை.1.
திறம்பட சுத்தமாக செய்த வேலைக்கு மகிழ்ச்சி.

கட்டிட ஆசாரி:

திரு. வேலாயுதம்.

கிரில் செய்தவர்:

திரு. எம். பி. கிருஷ்ணமூர்த்தி, பவர் காரியர், 129-ஏ, 100 அடி ரோடு,
டாடாபேட் , கோவை.12.

எலெக்ட்ரிக்:

திரு. நடராஜன், ஆர். எஸ். புரம்., கோவை.-2.

பெயிண்டர்;

திரு. குமார், காமராஜபுரம், கோவை.

பிளம்பர்:

திரு. வீராசாமி, வேலாண்டிபாளையம், கோவை.

முன்புறமுள்ள நடராஜர் சிலை:

திரு. பி. முத்து, சிவசக்தி சிற்பக்கலை, 5/78, மணிநாயுடு லேஅவுட்,
திருநகர், பங்கஜா மில் ரோடு, கோவை.

முன்புறம் இயற்கை மார்பில்ஸ்டோன்:

திரு. சி. ஏ. செரப்பன், காட்டூர், கோவை.

கட்டிட மேற்பார்வை:

திரு. கே. ஆர். ராமசாமி, 29, டி. பி. ரோடு, கோவை.

# சங்கத்தின் எதிர்காலம்

**ஆர். எல். சாத்தப்பன்**

கோவையிலுள்ள நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் ஒத்துழைப்பின் காரணமாக, நகரத்தார் சங்கத்திற்கென கவின்மிகு கட்டிடம் ஒன்று உருப் பெற்றுள்ளது. ஆரம்பிக்கப்பட்டு ஆண்டுகள் சில ஆகிவிட்டாலும், இடை யிடையே சில இன்னல்களும், பொருளாதார நெருக்கடிகளும் தலைதூக்கிய போதிலும், உறுப்பினர்களின் தளராத நம்பிக்கை, அயராத உழைப்பு, குன்றாத உற்சாகம், குலையாத ஒற்றுமை — ஆகியவற்றின் காரணமாக இன்று சங்கக் கட்டிடம் கம்பீரமாகத் தலைதூக்கி நிற்கிறது. நாமெல்லாம் பெருமைப்படத் தக்க அளவிற்கு அதன் அமைப்பும் மிக அழகாக உள்ளது.

கட்டிடத்தை உருவாக்கியதோடு நமது இலட்சியங்கள் முற்றுப்பெற வில்லை. இனித்தான் சங்கத்தின் தலையாய பணிகள் துவங்கவிருக்கின்றன.

தத்தமது சாதியினைச் சாதியினர் போற்றுமட்டும்
சபையில் முழக்கிடுவோர் சாதிக்கே வாழுமட்டும்
நாமும் நமதுகுலம் நலங்காணப் போரிடுவோம்
நகரத்தார் நலஉலகை நாளைக்கே நாம் காண்போம்!

என்ற கவிஞர் கண்ணதாசனின் கவிதைக்கேற்ப நகரத்தார்களின் ஒளிமயமான எதிர்காலத்திற்கு சங்கம் இனித் தீவிரமாகச் செயல்பட வேண்டும். சங்கத்தின் செயல்முறைகளும் நடைமுறைகளும் எவ்வாறு இருத்தல் வேண்டும் எனப் பார்ப்போம். (இது எனது கற்பனையே. மாறுபட்ட கருத்துக்களுக்கும் இடம் உண்டு.)

**செயற்குழு:**

சங்கம் என்று ஒன்று இருந்தால் அதற்குத் தலைவர், செயலாளர் போன் றோர் இன்றியமையாத தேவை. சங்கத்திற்குப் பொருளாதார நெருக்கடி தோன்றும்போதெல்லாம் தாராள மனதுடன் நிதியுதவி செய்யக்கூடியவர்கள், நகரில் பிரபலமாகவும், பலரோடு தொடர்பு கொண்டவர்களாகவும் (influential) உள்ளவர்கள், சொந்த வேலைகள் இருந்தாலும், சங்க வேலைகளுக்கு முதலிடம் கொடுத்து, மனந்தளராமல் உற்சாகமாகப் பணிபுரிபவர்கள், யாரிடமும் சலிப் படையாமல் அனைவருடனும் இன் முகத்துடன் பழகக் கூடியவர்கள், ஆக்கபூர்வ மான பணிகளைச் செயல் வடிவில் முடிக்கக்கூடியவர்கள் — ஆகியோரைப் பொறுப் பான பதவிகளுக்குத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

**கூட்டங்கள்:**

சங்கத்திற்கெனத் தனியான கட்டிடமும் வசதியான இடமும் இருப்பதால், உறுப்பினர்கள் அனைவரும் மாதம் ஒரு முறையாவது கூடுவது நல்லது. பல வகைப்பட்ட தொழில், வர்த்தகத் துறைகளைச் சார்ந்த உறுப்பினர்களும் நம்மிடையே இருப்பதால், ஒவ்வொரு மாதமும், ஒவ்வொரு துறையைச் சேர்ந்த ஒருவர் தமது தொழில் பற்றியும், தம்மால் மற்ற உறுப்பினர்களுக்குஎவ்வாறு உதவமுடியும் என்றும், மற்ற உறுப்பினர்கள் தனக்கு எவ்வாறு ஆதரவு தர முடியும் என்பது குறித்தும் உரையாற்றலாம்.

நம் சமூகத்தைச் சேர்ந்த பிரமுகர்கள், எழுத்தாளர்கள், பேச்சாளர்கள் தமிழறிஞர்கள் போன்றோர் கோவை வரும்போது அவர்களைக் கௌரவிக்கும் வகையில் சிறப்புக் கூட்டங்கள் நடத்தப்பட வேண்டும்.

அடிக்கடி கூடுவதால் பலரையும் அறியும் வாய்ப்புக் கிடைக்கும். இத்தகைய அறிமுகங்களால் விளையும் பயன்கள் ஏராளம். (உதாரணமாக ஒருவரது மகளுக்குத் திருமணம் நிச்சயமாகலாம்! இன்னொருவரது மகனுக்கு வேலை கிடைக்கலாம்.)

**பணிகள்:**

நகரத்தார்கள், ஆலயங்களில் மிகுந்த அக்கறை கொண்டவர்கள். தெய்வத் திருப்பணிகளுக்கு முதலிடம் தருபவர்கள். நமது முன்னோர்கள் ஆற்றிய நற்பணிகளின் காரணமாகவே நமது பெருமை இன்று இமயம்வரை எட்டியுள்ளது. காசியில் மட்டுமல்லாது கடல் கடந்த நாடுகளிலும் நகரத்தார் அமைத்த கோவில்கள் நமது பெருமையைப் பறைசாற்றி நம்மை வாழ்விக்கின்றன. இதனையொட்டி நாமும் தெய்வத்திருப்பணிகளுக்கே முதலிடம் தருதல் வேண்டும்.

**கல்வி:**

அடுத்தது கல்விப் பணியாகும். நகரத்தார்களின் குழந்தைகளுக்குத் தரமான கல்வி கிடைக்கச் செய்ய வேண்டும். முடிந்தால் நாமே பள்ளிகள், கல்லூரிகள் துவக்கலாம். வசதியற்ற நகரத்தார்களுடைய குழந்தைகளின் கல்விக்கு நிதியுதவி அளித்தல் முக்கியம். நமது சங்கங்களிலிருந்து ஒவ்வொரு பிள்ளைக்கும் ரூ. 50, 100 என்று கொடுக்கிறார்கள். இது போதாது. ஆண்டொன்றுக்கு ஒருவருக்கு ரூ. 500 அல்லது ரூ. 1000- வழங்கவேண்டும். அப்பொழுதுதான் அது பயனுடையதாகத் திகழும். பலருக்கும் சிறுதொகைகள் வழங்குவதை விட சிலருக்குப் பெரிய தொகைகளை வழங்குதலே அந்தச் சிலருக்காவது முழுப் பயனைத் தரவல்லது. மருத்துவர்களையும், பொறியாளர்களையும் விஞ்ஞானிகளையும் உருவாக்குவது நமக்கு நல்லதுதானே!

**தொழிற்பயிற்சி:**

அடுத்து தொழில் தொடர்புபடுத்தும் பயிற்சித் திட்டம் (Job orientation programme) ஒன்றை மேற்கொள்ளலாம். இதன்மூலம் நம் இளைஞர்கள் கல்வி

கற்று முடியுந்தறுவாயில் , நம்மவர்களின் தொழில் வர்த்தக நிலையங்களுக்குச் சென்று பயிற்சி பெறச் செய்யலாம். இளைஞர்கள், தொழில், வர்த்தகம் முதலானவற்றைத் தெரிந்துகொண்டு வேலைக்குச் சேர்வதற்கோ அல்லது சொந்தத் தொழில் தொடங்கவோ இப்பயிற்சி உதவும். சங்கத்தின் நிர்வாகிகள் இளைஞர்களிடமிருந்து விண்ணப்பங்களைப் பெற்று அவர்களுக்குத் தகுந்த துறையில் அவர்களை ஆற்றுப்படுத்தலாம்.

**திருமணத் தகவல்:**

இனித் திருமணத் தகவல் நிலையம் (marriage information bureau) ஒன்றையும் துவக்கலாம். திருமணம் செய்யத்தக்க வயதடைந்த பையன், பெண்களின் ஊர், விலாசம், வயது, படிப்பு, சீதனம், நகைகள், போன்ற விவரங்களை அறிந்து செய்திகளைத் தொகுத்து வைத்துக்கொண்டால், தேவைப்படுவோருக்கு விவரம் கொடுத்து உதவலாம். சங்கம் கல்யாணத் தரகராக வேலை செய்ய வேண்டியதில்லை. தகவல் நிலையமாகச் செயல்பட்டால் போதும். தற்காலத்தில் இது மிகவும் அவசியமான தேவையாகும்.

**இலக்கியப்பணி:**

இலக்கியப் பணியிலும் நம்மவர்கள் சளைத்தவர்களல்ல. செந்தமிழின் சிறப்புக்காக சீரிய பணிபல புரிந்தவர்கள், நகரத்தார்கள். நம்மிடையே இருந்து மறைந்த பண்டிதமணி மு. கதிரேசஞ் செட்டியார், ராய. சொக்கலிங்கம் செட்டியார், பாடுவார் முத்தப்ப செட்டியார் போன்றோரது படைப்புக்களை அறிந்து, அவற்றை உலகம் நன்கு அறியுமாறு வெளியிட்டுப் பிரபலப்படுத்துவது நமது முதல் கடமையாகும். இன்றும் நம்மிடையே பல பிரபலமான கவிஞர்களும், தமிழறிஞர்களும் வாழ்கின்றனர். இவர்களை அழைத்துக் கௌரவப்படுத்தி அவர்களது எழுத்துக்களையும் பெருமைகளையும் பிரபலமாக்குவது நமது திட்டங்களில் ஒன்ருகத் திகழ வேண்டும்.

**ஒற்றுமை:**

மேற்கூறியதைப் போன்ற இன்னும் பல நன்மைதரும் பணிகளை நாம் மேற்கொள்ளலாம். அதற்கு மிக அவசியமானது ஒற்றுமை. கவிஞர் கண்ணதாசனின் வார்த்தைகளில்

வண்டி மாடுகள் வழியிற் பிரிந்தால்
வண்டி கிடக்கும் மாடுதான் நடக்கும்

என்பதுபோல ஒற்றுமைக் குலைவு ஏற்பட்டால், அதனுல் நன்மையை இழப்பவர்கள் நாமே. ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்தும், நன்கு ஒத்துழைத்தும், செயலாற்றுபவர்களைத் தட்டிக்கொடுத்து உற்சாகப்படுத்தியும், குறை கூருமலும் இருந்தாலே போதும். ஒற்றுமையுடன் செயல்பட்டால் ஓராயிரம் மடங்கு அதிகப் பயனை அடையலாம்.

கோவை நகரத்தார் சங்கத்தின் எதிர்காலம் ஒளிமயமாகத் திகழ எல்லாம் வல்ல இறைவன் நல்லருள் புரிவானுக.!

# உழைப்புக்கு ஒரு சோமு

இடம் கோவையில் கௌலி பிரவுன் ரோடு. நகரத்தார் சங்கக் கட்டிடம். கட்டிடவேலைகள் நடந்துகொண்டிருந்த சமயம் —ஒருநாள் பகல் 2 மணி — கொளுத்தும் வெய்யில் — நல்ல சிவப்புநிறம். சுமார் 35 வயது மதிக்கத்தக்க ஒரு அன்பர் — ஏர்கண்டிஷன் அறையில் இருக்கவேண்டிய அவர் அனல்பறக்கும் இரும்புக் கம்பிகளின் மேல் நின்றுகொண்டு காங்க்ரீட் போடுவதை மேற்பார்த்துக்கொண்டிருந்தார். அந்தந்த நேரத்திற்குச் சரியாக உணவு அருந்தும் பழக்கமுள்ள அவர் அன்று நேரங்கடந்தும் உணவு அருந்தச் செல்லாது நின்றுகொண்டிருந்தார். இப்படிப் பல நாட்களில் அவர் அங்கு கருமமே கண்ணாகி நிற்பதைக் கண்டிருக்கிறோம். அவருடைய பல்வேறு ஸ்தாபனங்களின் வேலைகளே தலைக்கு மேல் இருக்கும் அவர் ஏன் இந்தக்கட்டிடப் பணிக்காக இவ்வளவு பாடுபட வேண்டும்? சமூகப் பணியே சாலச் சிறந்தது என்பதில் திடமான நம்பிக்கையுள்ளவர்கள் அப்படித்தானே பாடுபடுவார்கள்.

அவர் இப்படிப் பணிபுரியும் ஆற்றலுள்ளவர்—ஒன்றே செய்வார்—ஒன்றும் நன்றே செய்வார்—நன்றும் இன்றே செய்வார்—இன்றும் இன்னே செய்வார்—அதையும் இனிதாகச் செய்வார் என்பதை நன்குணர்ந்த கோவை நகரத்தார்கள் சங்க நிருவாகச் செயலாளர் பொறுப்பையும் கட்டிடப் பொறுப்பையும் அந்த அன்பரிடம் ஒப்படைத்தார்கள்—சுமார் இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு.

வள்ளுவப் பெருந்தகையின் அருள் வாக்குக்கொப்ப

''இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்''

கோவை நகரத்தார்களைப் பாராட்டுவதா அல்லது ஏற்ற பொறுப்பை இனிது முடித்த அன்பர் திரு. L. சோமு அவர்களைப் பாராட்டுவதா என்றே தெரியவில்லை.

எனினும், இவ்வாறு உழைப்பால் உயர்ந்து, உயர்ந்தும் உழைத்த திரு. சோமு அவர்களையே முதலில் பாராட்டுவோம்.

திருக்கொள்ளம்புதூரில் சிவனுக்குத் திருக்கோவில் எழுப்பித் திருப்பணி புரிந்த நச்சாந்துப்பட்டி பெ. ராம. குடும்பத்தைச் சேர்ந்த திரு. சோமு அவர்கள் பொதுப்பணியில் தொண்டருக்குத் தொண்டராக விளங்குவதில் ஆச்சரியமில்லை.

கோயமுத்தூர் மாவட்ட பான்புரோக்கர் சங்கத் தலைமைப் பதவி, கோவை இரத்தின விநாயகர் கோவில் திருவெம்பாவைக்குழு உபதலைவர் பதவி, நச்சாந்துப்பட்டி இராமனுதன் செட்டியார் உயர்நிலைப்பள்ளிச் செயலாளர் பதவி, கோவை நகரத்தார் சங்க நிருவாகச் செயலாளர் பதவி போன்ற பல பொதுப் பணிகளில் ஈடுபட்டிருக்கும் அவர்தம் தன்னுடைய சொந்த இல்லமான ''வள்ளி வளமனை'' கட்டிடம் உருவாகிய காலத்தில் கூட இவ்வளவு பாடுபட்டறியாதவர். சமூகச் சேவையில் தான் கொண்டுள்ள உறுதி காரணமாக நகரத்தார் சங்கக் கட்டிடத்தை மிகக் குறுகிய காலத்தில், பணத்தட்டுப்பாடு ஏற்பட்ட நேரங்களில் கூடத் தம் செல்வத்தையே பயன்படுத்திக் கட்டி முடித்தார் என்றால் அவருக்கு நாம் மிகவும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம்.

''என் கடன் பணி செய்து கிடப்பதே'' என்ற குறிக்கோளும், தொண்டு உள்ளமும், தாராள மனப்பான்மையும், ''நன்மையும் தீமையும்நாடி நலம்புரிந்த தன்மையும்'', ''அன்பறிவுதேற்றம் அவாவின்மை'' இந்நான்கும் நன்குடைய திரு சோமு அவர்கள் இன்னும் பலபல சமூகப் பணிகள் செய்து சிறப்புற்று வாழ நாம் எல்லோரும் வாழ்த்துவோமாக! வாழ்க சோமு!! வளர்க அவர் சமூகப்பணி!!! வளர்க கோவை நகரத்தார் சங்கம்!!!!

## ஜகத்குரு
## ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராச்சாரிய சுவாமிகள்
## அருள்வாக்கு

ராஜாக்களின் காலம் முடிந்த பிற்பாடு கோயில் திருப்பணி செய்தவர்களைச் சொல்கிறபோது முதலில் நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகத்தை மனசார நினைத்து நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறோம். திரைகடல் ஓடித் திரவியம் தேடிய இந்த நாட்டுக்கோட்டை செட்டிமார்கள், அந்தத் திரவியத்தை வேதரட்சணத்திற்கும், தேவாலயத் திருப்பணிகளுக்கும் அள்ளி அள்ளித் தந்து, பழைய அரசர்களின் இடத்தைப் பெற்றார்கள். காளஹஸ்தி வரையில் இவர்கள் திருப்பணித் தர்மம் பரவியிருக்கிறது.

*நன்றி- 'கல்கி; தீபாவளி மலர்-1974*




நடராசன் அருள் நிறைந்த நகரத்தார்
சங்கத்தின் நுழைவாயில் தோற்றம்
நுகர்வீர் !







வாழ்மனைக்குப் பால்காய்ச்ச
வரிசை பலதாங்கி
வாழ்வாங்கு வாழும்
பெருமக்கள் வருகின்றார்

நகரத்தார் சார்பாக நற்பிரசாதம் பெறும்
முருகப்பர் தம்பதிகள்





நந்தா விளக்கேற்றும் நம்தலைவர்
நல்துணைவி அன்னபூரணி ஆச்சி

இல்லம் புகுவிழாவில் எல்லாம்
பெண்கள்மயம்!





# புன்னகை

ஆர். எல். சாத்தப்பன்

பொன்னகை அணிந்தால் எந்தன்
பூவுடல் தாங்கா தென்று
புன்னகை தந்தான் இறைவன்
புவியில்நீ மகிழ்க என்றே!

இனிய புன்னகை நான்ஏற்க
இனிய பண்புகள் எனைநாட
கனிவு நிறைந்த இதயத்தால்
கவர்ந்தே மகிழ்வேன் நண்பர்களை!

பாலின் இனிய என் புன்னகையைப்
பார்த்துத் தெளிந்த குழந்தையெலாம்
சேலின் விழிகள் எதிர்நோக்க
சிரித்து வருவார் எனைத்தேடி!

வேலும் மயிலும் துணையென்றே
வேண்டும் பக்தர் குழுவெல்லாம்
வேலன் புன்னகை தனைக்கண்டு
வேதனை யெல்லாம் மறக்கின்றார்!

# நகரத்தார் திருமணங்களுக்கு நிதி உதவி

SM. KR. கருப்பன் செட்டியார்

(தலைவர், நகரத்தார் சங்கம், கோவை)

காலம் அறிந்து தக்க சமயத்தில் செய்யப்படும் உதவி, அது அளவில் எத்தன்மையது ஆயினும் போற்றி உரைக்கப்படும் என்பது வள்ளுவர் வாக்கு. அவ்வப்போது சமூகத்தின் தேவைக்கேற்ப அறப்பணிகளை நகரத்தார்கள் செய்து வருவதால், சிறப்படைகின்றார்கள்.

நகரத்தார்கள் அரசர்களுக்கு அடுத்தபடியாக ஆலயத் திருப்பணிகள் செய்து சிறந்தனர். மன்னர்கள் எழுப்பிய எண்ணற்ற ஆலயங்களைப் புதுப்பித்தனர். சிவஸ்தலங்களில் விடுதிகளும் அறக்கட்டளைகளும் ஏற்படுத்தினர். பின்னர் கால மாற்றத்தால் கல்வியின் சிறப்பை உணர்ந்து கல்வி நிலையங்களும், மக்கள் நோய் தீர்க்க மருத்துவ மனைகளும் நிறுவினர். தற்காலம் சமுதாய மறுமலர்ச்சி காண நகர்களில் சங்கங்கள் அமைத்து சமூகச் சீர்திருத்தம், வளர்ச்சி ஆகியவற்றிற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகின்றனர்.

இன்றைய நிலையில் **'பெண் திருமணம்'** நம்மரபினர்க்குப் பெரும் சுமையாக இருந்து வருகிறது. வெளிநாட்டுத் தொடர்புகள் விடுபட்டுப்போய் வருமான வாய்ப்புகள் குன்றிய நிலையில் நாளெல்லாம் உழைத்து சிறுகச் சிறுகச் சேர்த்த தொகைகளையும், சீதனமாகவும், சாமான்களாகவும் பரப்புவது, தீர்வுகாண முடியாத சுமையாக இருந்து வருகிறது.

நடுத்தர வருவாய் உடைய குடும்பங்கள் இம்முறையில் நலிந்து வருகின்றன. நாளடைவில் இது செயல்பட முடியாததாகும். குடும்ப வளர்ச்சியையும் நலன்களையும் பாதிக்கும்.

இந்நிலை மாறி மறுமலர்ச்சிகாண நகரத்தார்களின் தனிப்பட்ட அற நிலையங்களும் சங்கங்களும் நன்முயற்சி செய்து வருவது வரவேற்கத்தக்கது. திருமணங்கள் நிகழவும், நெருக்கடிகளை ஓரளவு தவிர்க்கவும், நிதி உதவியும், கல்விப்பணிகளும் சங்கங்களால் அதிக அளவில் செய்யப்பட்டு வருகின்றன. இவ்வகையில் காரைக்குடி நகர், சிங்கப்பூர் நாட்டுக்கோட்டைச் செட்டியார் அறப்பணிக்கழகம், மலேசியா, பேரா நகரில் இயங்கும் ''தண்டாயுதபாணி கோயில் தர்மம்'' மூவார் நகரில் இயங்கும் ''நாட்டுக்கோட்டைச் செட்டியார்

கோயில் தர்மம்,'' பிள்ளையார் பட்டி கோயில் நகரத்தார் தர்மம், மலாக்கா, கோலாலம்பூர், பிறைங்கு, செய்கூன் நகரத்தார்கள், இளையாற்றங்குடி கோயில் நகரத்தார்கள், மற்றும் நகரத்தார் சங்கங்களும் அளித்துவரும் நிதியுதவிகள் பாராட்டுக்குரியன. அனைவரும் அவ்விவரங்களை அறியவேண்டும் என்ற அவா வுடன் செய்தி கிடைத்துள்ளவரைக்கும் கீழே தருகிறேன்.

**சிங்கப்பூர் நாட்டுக்கோட்டை செட்டியார் அறப்பணிக் கழகம்**

இக் கழகம் 1966-ஆம் ஆண்டு மே மாதம் 11- ஆம் தேதி காரைக்குடி யில் நிறுவப்பட்டது. மேற்கூறப்பட்ட இருவகையிலும் உதவி வருகின்றனர்.

இங்கு ஒவ்வொரு ஆண்டும் இரண்டு தடவையாக மொத்தம் 20 திரு மணங்களுக்கு ஒரு திருமணத்திற்கு ரூ. 2,000- விதம் மொத்தம் ரூ. 40,000- கொடுக்கப்படுகிறது. ஆண்டுதோறும் புரட்டாசி, பங்குனி மாதங்களில் நடை பெறும் கழகக் கூட்டங்களில் மனுக்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றன. ஏழை எளிய குடும்பத்தைச்சேர்ந்த பெண் வீட்டார்க்கே இத்தொகை அளிக்கப்படும். மண மகன் போதியவருவாய் உள்ளவராக இருத்தல் வேண்டும். கல்வி பயிலவும் உதவித் தொகை கணிசமான அளவில் கொடுக்கப்பட்டு வருகிறது. இவை நன் கொடையாகவே அளிக்கப்படுகின்றன. திரும்பத் தரவேண்டியதில்லை. கடந்த 1973 ஆம் ஆண்டு முடிய 87 திருமணங்களுக்கு ரூ. 1,62,500-00ம், 441 மாணவ மாணவிகட்கு ரூ. 76,689-00ம் இந்த அறக்கழகம் வழங்கியுள்ளது.

**தெண்டாயுதபாணி கோயில், பேரா**

திருமணம் ஒன்றுக்கு ரூ. 2,500/- விதம் ஆண்டில் 4 திருமணங்க ளுக்கு நன்கொடையாகக் கொடுக்கப்படுகிறது. ஆண்டுக்கு நபர் 1, ரூ. 500/- விதம் கல்வி உதவித் தொகையும் அளிக்கப்படுகிறது. இது வட்டியின்றித் திரும்பச் செலுத்தப்படும் உதவித்தொகையாகும்.

**நாட்டுக்கோட்டைச் செட்டியார் கோயில், மூவார்**

ரூ. 2,000- விதம் ஓராண்டில் இரண்டு திருமணங்களுக்கு ரூ.4,000- வழங்கப்படுகின்றது. 'உண்டியல்' (Draft) மணமகள் பெயருக்கு எழுதப்பட்டு சிபாரிசு செய்யும் பொது மனிதர் மேல் விலாசத்திற்கு அனுப்பப்படுகிறது. அவர்கள் முன்னிலையில்தான் திருமணம் நடைபெற வேண்டும்.

**பிள்ளையார் பட்டி கோயில் தர்மம்**

இக்கோயிலைச் சேர்ந்த புள்ளிகளுக்கு ரூ. 2,500-ம் ஏனைய கோயிற் புள்ளிகட்கு ரூ. 2000 மும் திருமண உதவி நிதியாக அளிக்கப்படுகின்றது. வருடத்துக்கு 9 திருமணங்களுக்கு கொடுக்கிறார்கள்.

இளையாற்றங்குடி கோயிலில் மேற்படி கோயில் பெண் பிள்ளையாக இருந்தால் ரூ. 2,000/-மும், மற்ற கோயில் பெண்பிள்ளையாக இருப்பின் ரூ. 1,000/-மும் மொத்தம் நான்கு திருமணங்களுக்கு கொடுத்து வருகிறார்கள் என்று தெரிகிறது.

மலாக்கா நகரத்தார் திருமணத்திற்கு ரூ. 2,500/- வீதம் ஓராண்டில் 9 திருமணங்களுக்குக் கொடுத்து வருவதாகத் தெரிகிறது. இவை தவிர கோலாலம்பூர், பினாங்கு, ரெங்கூன் மற்றும் மலேசியாவின் பல நகரங்களில் உள்ள நகரத்தார்கள் திருமணங்களுக்கு 'நிதி உதவி' அளித்து வருவதாகத் தெரிகிறது.

இனி நகரத்தார் ஐக்கிய சங்கத்தில் இருந்தும் மதுரை, திருச்சி, சேலம், கோவை, தென்னார்க்காடு ஆகிய நகர்களில் உள்ள நகரத்தார் சங்கங்களில் இருந்தும் திருமண, கல்வி நிதி உதவி, அளிக்கப்பட்டு வருகிறது.



தமிழகத்தில் உள்ள எல்லாக் கோயில்களிலும் நகரத்தார்களின் பங்கும் சேவையும் இல்லாத கோயில் இல்லை என்று கூறிவிடலாம். பொருள்களைத் தேடுவது ஒரு புறமிருந்தாலும் தேடிய பொருளைத் தர்ம காரியங்களுக்கும் ஆன்மீகத்தை வளர்ப்பதற்கும் நகரத்தார்கள் மிகவும் செலவு செய்து முன்னணியில் இருந்து பணியாற்றியுள்ளார்கள். அவர்களது தர்ம காரியங்களை நான் மனமாரப் பாராட்டுகிறேன்.

— சிருங்கேரி ஜகத்குரு சங்கராச்சாரிய சுவாமிகள்

மேலைச் சிதம்பரம் என்ற பேரூரில் பட்டீஸ்வர சுவாமி தேவஸ்தானத்தில் வெளிப் பிரகாரத்தில் உள்ள ஸ்ரீ பால தண்டாயுதபாணிக்கு, ஒவ்வொரு ஆங்கில மாத முதல் ஞாயிற்றுக்கிழமைகளில் மாலை 6 மணியளவில் அபிஷேக ஆராதனைகள் மூன்றாண்டுகளுக்கு மேலாக, அலவாக் கோட்டை திரு. நாக. இராமனன் செட்டியார் குடும்பத்தினர் முன்னின்று சிறப்பாக நடத்தி வைத்து வருகின்றனர். இந்த அபிஷேக ஆராதனைகளில் கோவை நகரத்தார் பலரும் பங்கு கொண்டு சிறப்பித்து வருகின்றனர்.



## ❋ கட்டிடம் கட்ட நன்கொடை தந்தவர்கள்

| | |
|---|---|
| ராஜா சர். மு. அ. முத்தையா செட்டியார் அவர்கள் | ரூ. 20000 |
| கோயமுத்தூர் நாட்டுக்கோட்டை நகரத்தார் தரும நிதி | 5000 |
| AL. சிங்காரம் செட்டியார் | 2500 |
| ராம. மு. சோம. முத்தப்ப செட்டியார் | 2500 |
| SM. KR. கருப்பன் செட்டியார் | 2500 |
| L. சோமு | 2500 |
| RM. ரெங்கநாதன் செட்டியார் | 1000 |
| ராமசாமி செட்டியார் | 1000 |
| S. MR. முருகப்ப செட்டியார் | 1000 |
| SM. ரெங்கநாதன் | 1000 |
| KM. RM. குமரப்ப செட்டியார் | 1000 |
| தியாகராஜா கார்ப்பரேஷன் | 1000 |
| RM. ஏகப்பன் | 1000 |
| N. K. நாகப்ப செட்டியார் | 1000 |
| மெய்யப்பா ஆட்டோ ஸ்டோர்ஸ் | 1000 |
| S. ST. சிதம்பரம் செட்டியார் | 1000 |
| மீனாக்ஷி ஆட்டோ ஸ்டோர்ஸ் | 1000 |
| K. இராமனுதன் செட்டியார் | 1000 |
| PL. S. RM. சிவனடியான் செட்டியார் | 1000 |
| S. V. N. நாகப்ப செட்டியார் | 1000 |
| PL. K. குப்பான் செட்டியார் | 1000 |
| PL. S. RM. பழனியப்பன் | 1000 |
| PL. S. சுப்பிரமணியன் செட்டியார் | 1000 |
| KM. N. அண்ணுமலை செட்டியார் | 1000 |
| சாந்தி பைனுன்ஸ் | 1000 |
| சேக்கப்பா டயர்ஸ் | 1000 |
| காசிநாத் அன் கோ | 501 |
| N. சோமசுந்தரம் அன் கோ | 501 |
| C. இலட்சுமணன் | 501 |
| ராஜலட்சுமி பேங்கர்ஸ் | 500 |
| செல்வம் பேங்கர்ஸ் | 500 |
| கற்பகம் கார்ப்பரேஷன், காந்திபுரம் | 500 |
| சுப. தியாகராசன் | 500 |
| KR. ஆண்டியப்ப செட்டியார் | 500 |
| K. மாணிக்கம் செட்டியார் | 500 |
| S. E. SV. நாராயணன் | 500 |
| SP. ஜெயங்கொண்டான் | 250 |
| உமையாள் பேங்கர்ஸ், காந்திபுரம் | 201 |
| E. தெய்வானை | 201 |
| ஐயப்பன் என்வலப்ஸ் | 101 |
| V. N. வெங்கிடாசலம் | 101 |
| லெஷ்மி கார்ப்பரேஷன், காந்திபுரம் | 101 |
| N. வஸந்தா | 101 |

| | |
|---|---|
| விஜயலட்சுமி பேங்க் | ரூ. 101 |
| SP. N. நாகப்ப செட்டியார் | 101 |
| மீனாட்சி பேங்கர்ஸ் | 101 |
| சீதாலெக்ஷ்மி பேங்கர்ஸ் | 101 |
| L. S. RM. ராமநாதன் | 101 |
| KR. ராமநாதன் | 101 |
| ராதா பேங்கர்ஸ் | 101 |
| ராமநாதன் பேங்கர்ஸ் | 101 |
| ராஜாராம் பேங்கர்ஸ் | 101 |
| தெய்வானை ஆச்சி பேங்கர்ஸ் | 101 |
| ஞானம் பைனான்ஸ் | 101 |
| L. AR. லெட்சுமணன் பேங்கர்ஸ் | 101 |
| மீனாம்பாள் பேங்கர்ஸ் | 101 |
| AL. ராமநாதன் | 101 |
| சரஸ்வதி பேங்கர்ஸ் | 51 |
| முத்துராமன் பைனான்சியர் | 51 |
| முருகன் பைனான்சியர் | 51 |
| N. A. T. V. கார்ப்பரேஷன் | 51 |

## டெபாசிட் வரவு

| | |
|---|---|
| சுப்பு பைனான்ஷியர்ஸ் | 1000 |
| PL. S. RM. ராமநாதன் செட்டியார் | 1000 |
| ரெமிசிட் பண்ட்ஸ் | 1000 |
| காசி ஆட்டோமோபைல்ஸ் | 1000 |
| AR. முத்துவீரப்ப செட்டியார் | 1000 |
| KM. நாராயணன் | 1000 |
| S. சுப்பையா செட்டியார் | 1000 |
| A. மெய்யப்பன் | 1000 |
| S. S. A. ராமன் செட்டியார் | 1000 |
| PL. RM. வயிரவன் செட்டியார் | 1000 |
| சோமு லாட்ஜ் | 1000 |
| AN. வெங்கடாசலம் செட்டியார் | 1000 |
| M. P. V. வெங்கிடாசலம் செட்டியார் | 500 |

## நகரத்தார் சங்கத் துவக்கத்திற்கும் மனை வாங்கவும் நன்கொடை தந்தவர்கள்

| | |
|---|---|
| ராஜா சர். மு. அ. முத்தையா செட்டியார் | 5000 |
| அ. மு. மு. | 2500 |
| மு. அ. சிதம்பரம் செட்டியார் | 2500 |
| பழ. கு. குப்பான் செட்டியார் | 1600 |
| கருமுத்து தியாகராஜன் செட்டியார் | 1000 |
| லெ. அழகு சுந்தரம் செட்டியார் | 1001 |
| லெ. நாராயணன் செட்டியார் | 1001 |
| S.MR. முருகப்ப செட்டியார் | 1001 |

| | |
|---|---|
| PL.S.RM. (ராமநாதன் செட்டியார்) FIRM | ரூ. 1001 |
| ராம. மு. சோம முத்தப்ப செட்டியார்&SM.KR. கருப்பன் செட்டியார் | 900 |
| K. C. ராமநாதன் செட்டியார் | 751 |
| AL. சிங்காரம் செட்டியார் | 701 |
| S. ST சிதம்பரம் செட்டியார் | 701 |
| அரு. லெ. வெ. நடராஜன் செட்டியார் | 501 |
| NK. நாகப்ப செட்டியார் | 501 |
| SV. N. நாகப்பன் | 501 |
| RM. லெட்சுமணன் | 501 |
| KR. ஆண்டியப்பன் | 501 |
| சுப. தியாகராஜன் | 501 |
| மீனாக்ஷி ஆட்டோ ஸ்டோர்ஸ் | 501 |
| S. MR. S. சுப்பையா செட்டியார் | 501 |
| C. லெட்சுமணன் | 401 |
| S. சோமசுந்தரம் செட்டியார் | 401 |
| SM. ரெங்கநாதன் | 301 |
| அ. பெரி. ராம. | 301 |
| சு. சொ. அ. ராம. | 301 |
| M. V. M. முத்து | 301 |
| சுப்பு பைனான்ஸியர்ஸ் | 301 |
| முருகப்பா பைனான்ஸியர்ஸ் | 301 |
| இராம. ஏகப்பன் | 251 |
| சின்னம்மாள் அண் கோ | 250 |
| பழநியப்பா பேங்கர்ஸ் | 250 |
| கோவை பைனான்ஸியர்ஸ் | 250 |
| K. கண்ணப்ப செட்டியார் | 201 |
| மெய்யப்பா மோட்டார் ஸ்டோர்ஸ் | 201 |
| RM. வீரப்பன் | 201 |
| முத்துராமன் அண் கோ | 201 |
| தியாகராஜா கார்ப்பரேஷன் | 201 |
| கலைமகள் அச்சகம் | 201 |
| காசிநாத் அண் கோ | 201 |
| N. சோமசுந்தரம் அண் கோ | 201 |
| செல்வம் பேங்கர்ஸ், காந்திபுரம் | 101 |
| மாணிக்கம் அண் கோ | 101 |
| இராமநாதன் பேங்கர்ஸ் | 101 |
| பத்மா பார்மஸி | 101 |
| பழநியப்பா பார்மஸி | 101 |
| யுனைடெட் இந்தியா கார்ப்பரேஷன் | 101 |
| ஈஸ்வரன் இண்டஸ்டிரீஸ் | 101 |
| PL. சுப்பிரமணியன் (ராஜாராம் பேங்கர்ஸ்) | 101 |
| ஸ்டேட் ஐஸ் கம்பெனி | 101 |
| சேது. பேங்கர்ஸ் | 101 |
| கர்ப்பகம் கார்ப்பரேஷன் | 101 |

1—12—1974 வரை கிடைக்கப் பெற்ற நன்கொடையாளர்களின் பட்டியல்

# நகரத்தார் வரலாறு

கோவை நகரத்தார் சங்கக் கட்டிடத்தை உருவாக்கும் பணியில் முன்னின்று உழைத்த திரு. எல். சோமு அவர்கள், தமது மகள் வள்ளியம்மையின் திருமணத் தின்போது ''நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு'' என்ற பெயரில் பயன்மிக்க நூல் ஒன்றை வெளியிட்டுள்ளார்கள். நகரத்தார்களின் பண்டைய வரலாறு, திருமண முறைகள், கோயில்கள் ஆகியவை பற்றிய அரிய செய்திகளைக் கொண்ட இந்நூலிலிருந்து சில பகுதிகளை இங்கு தரப்படுகின்றன.

ஆர். எல். சாத்தப்பன்

**நகரத்தார் நிர்ணயஞ் செய்த சாதி முறை நியாயங்கள்**

மாதா, பிதா, குரு, தெய்வம் குலதேவதை இவர்களை வணங்கிப் பூசிக்கிறது.

கோவில்களுக்கும் குரு நிலையங்களுக்கும் உள்ள கிராமம் முதலியவற்றை, நகரத்தார் விசாரணையில் வைத்துக்கொண்டு, அவற்றால் வரும் ஊதியத்தை அந்த அந்தத் தருமங்களுக்கே உபயோகப்படுத்துகிறது.

சாதி முறை நியாயங்களில் தவறி நடக்கிறதில்லை. நற்கருமங்களைச் செய்கிறது.

ஆடவரும் பெண்டிரும் தங்கள் தங்களுக்கு ஏற்பட்டிருக்கும் குரு ஸ்தானங் களிலேயே தீட்சாகிரியை முதலியவை வழக்கப்படி செய்துகொள்கிறது. வேறொருவரிடத்தும் தீட்சாகிரியை முதலியவை செய்துகொள்ளக்கூடாது-

சிவ மதத்திலேயே இருக்கிறது. அந்நிய மதங்களில் சேரக்கூடாது.

ஏக கோத்திரத்தில் திருமணம் செய்துகொள்ளுகிறதில்லை. (கோத்திரம் என்பது கோவில்களும் உட்பிரிவுகளும்) சுய கோத்திரத்தில் புத்திர ஸ்வீகாரம் செய்துகொள்கிறது. (மாற்றூர்க்கோவில், இளையாத்தன் குடிக்கோவில் இரண்ட னுட்பிரிவுகளில் சம்பந்தஞ் செய்துகொள்ளும் வழக்கம், புள்ளிகள் பெருகிவிட்ட காரணத்தால் பிற்காலத்தில் நிகழ்வதாயிற்று.)

இரத்தினம், சுவர்ணம், பலசரக்கு முதலிய வியாபாரங்கள் செய்கிறது. சிவவதையான வியாபாரங்கள் செய்கிறதில்லை. வாய்மை தவறு மேலோர் களிடத்தில் பணம் கொடுக்கல் வாங்கல் செய்கிறது. தருமவட்டி வாங்குகிறது. குதிரை வியாபாரமும், வெற்றிலை முதலிய அழுகற்சரக்கு வியாபாரமும் செய்யக்கூடாது.

குடிவாரத்திற்கு உழுது பயிரிடுகிறதில்லை. ஊரில் அம்பல உம்பள நிலைமை பெற்று வேலைகள் பார்க்கக்கூடாது.

திருட்டு வியாபாரஞ் செய்யக்கூடாது. பிறன் மனைவியைச் சேரக்கூடாது. தாசிகளிடத்தில் கொடுக்கல் வாங்கல் செய்யக்கூடாது.

நகர முறைமை தவறினவர்களையும், இராச தண்டனைக்குட்பட்டவர்களையும், சோரஞ் செய்தவர்களையும் நட்புக் கொள்ளக்கூடாது.

கடலுக்கு மேற்கு, பிரான்மலைக்குக் கிழக்கு, வைகைக்கு வடக்கு, வெள்ளாற்றிற்குத் தெற்கு இந்நான்கு எல்லைகட்குட்பட்ட வேளாளர் பூமியாகிய இந்நாட்டிலேயே குடியிருக்கிறது.

பெண்டிர், சுவாமி தரிசனம் தீர்த்த யாத்திரைகளுக்கு ஆடவர்களுடன் போய்வரவேண்டும்.

எந்த விஷயங்களிலும் முன் வழக்கப்படி நடந்துகொள்கிறது.

கோவில் வாசலிலாவது, மடத்து வாசலிலாவது நகரக் கூட்டம்கூடிச் சாதி நியாயம் பேசுகிறது.

மேற்கண்ட ஒன்பது கோவில் நகரத்தாருக்கும், அவரவர்களுக்குரிய கோவில்களிலிருந்து சுவாமிக்குச் சாத்தின மாலையும், விபூதிப் பிரசாதமும் வந்து தான் திருமணம் நடத்தல் வேண்டும்.

திருமணம் நடக்கிற விவரத்தைப்பற்றிக் கோவில் வாசல்களில் தாம்பூலம் வைத்து முன்னமே தெரிவித்தல்வேண்டும்.

இரணியூர்க் கோவிலாரும், பிள்ளையார்பட்டிக் கோவிலாரும், சகோதரர்களின் வமிசத்தாராதலால் தம்முள் கலியாணஞ் செய்துகொள்ளக்கூடாது. மற்றைக் கோவில்களில் செய்துகொள்ளலாம்.

**நாட்டுக்கோட்டை**

புகார் நகரில் தனவைசியர்கள் வளைவு கட்டி (வளைவு என்பது பல இல்லங்களை தன்னுட்கொண்ட இருப்பிடம்) அதனுள் ஒவ்வொரு வீதிக்கும் ஒவ்வொரு ஊர்ப்பெயர்வைத்து வாழ்ந்திருந்தனர். இங்குக் கோட்டைகள் திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த ஸ்ரீவைகுண்டத்தில் தற்போதுள்ள கோட்டைபோல் மண்ணுற் கட்டப்பட்டிருந்தன. சோழ மன்னனுக்கு நகரத்தில் கோட்டையும் இவர்களுக்கு அவ்வரசன் ஆட்சி உட்பட்ட நாட்டில் கோட்டையுமாக இருந்ததால் நாட்டுக்கோட்டையார் என அழைக்கப்பட்டனர்.



அலையென மக்கள் அணி வகுத்திடவே
தலைவர்கள் தம்மை வரவேற்கும் காட்சி



சிறப்பு விருந்தினர்கள்
சிந்தை குளிர்வித்து
உறவாடும் நம் தலைவர்
உயர் கருப்பன் செட்டியார்



மங்கல வாழ்த்து
மணிச் செய்தி வாசிக்கும்
ரங்கனாதப் பெருந்தகை !



தலைமை உரையாற்றி தன்னினத்தோர்
தமக்கு நிலைமை தெளிவாக்கும் நேர்
அழகு சுந்தரனார்



ஓங்குபுகழ் சோமு உயர்வுறவே
பொன்னாடை அணிவித்தார்
எங்கள் அருமைமிகு அரசர்



மாசற்ற எங்கள் மணித்தலைவர் ராஜா
நாகப்பர்க்(கு) அணிவித்தார்
நலம்பெறவே பட்டாடை

இனி, நாடு என்றால் சோணாட்டினைக் குறிக்கும். சோணாட்டில் கோட்டை கட்டி நெடுங்காலம் வாழ்ந்தமையின் சோணாட்டுக் கோட்டையார் என அழைக்கப்பட்டு பின்னர் நாளடைவில் அது திரிந்து நாட்டுக்கோட்டையார் எனவும் வழங்கப்பட்டிருக்கலாம்.

உள்நாட்டில் வந்து கோட்டைகளைப்போல வீடுகள்கட்டி வாழ்ந்ததாலும் நாட்டுக்கோட்டையார் என அழைக்கப்பட்டிருக்கலாம்.

**நகரத்தார்**

பண்டு பூம்புகார், ''நகரம்'' ''புகார்'' ''பட்டினம்'' என்ற பெயர்களாலேயே வழங்கப்பட்டது. எண்ணிறந்த ஆண்டுகளாகப் புகார் நகரத்தையே உறைவிடமாகக் கொண்டு வாழ்ந்த பெருங்குடியினர் அதனை நீத்து வேளாளர் பூமியில் குடியேறியபோது நகரத்திலிருந்து வந்து குடியேறியதால் நகரத்தார் எனப் பெயர் பெற்றனர்.

இனி, தமிழர் வீடு அமைக்கும் வகையில் நகர் என்பது ஒன்று. சங்க இலக்கியங்கள் பெருஞ் செல்வர் மனைகளை நகர் என்றே குறிக்கின்றன. ''பொன்னுடை நெடு நகர்'' பெருவளம் பழுனிய கொழு நகர்'' என்ற சொற்றொடர்கள் சங்க நூல் பயின்றோர் நன்கு அறிந்தவை. நகர் என்பது இரண்டாயிரம் கோலுக்குக் குறையாத பரப்புடையது; சுற்றிலும் தாழ்வாரமும், சிற்றறைகளும் நடுவில் வெயில் முற்றமும் மாடியில் நிலா முற்றமும், புறவிறையும், உச்சியிற் கலசங்களும் பல்வேறு ஓவிய வேலைப்பாடுகளும் நிறைந்து குறுநில மன்னர் பெருமனை போல விளங்குவது. இந்த நகர்களையே இச்செல்வர்கள் தமது ஊர்களில் அமைத்து வாழ்வதால் நகரத்தார் எனும் சிறப்புப் பெயர் பெற்றனர்.

**செட்டி**

செட்டி என்னுஞ் சொல் வணிகரைக் குறிப்பது. செட்டிறை, செட்டியிறை என்பன வணிகருக்கு விதிக்கப்பெற்ற சுங்க வரிகள் ஆகும்.

வணிகரில் சிறந்தோர்க்கு ''எட்டி'' என்ற பட்டம் பாண்டிய அரசர்களால் கொடுக்கப்பட்டது. எட்டி என்பதே செட்டி என மருவி வழங்குகிறது என்பர் சிலர். எட்டிச் சாத்தன் என்று ஒரு தலைவன் இருந்ததாகவும் வரலாறு உண்டு.

''செட்டி'' என்னுஞ் சொல் ''ஆர்'' விகுதி பெற்று செட்டியார் என்னும் சொல் ஏற்பட்டது என்பதே பெரும்பாலோர் ஏற்கும் கருத்தாகும்.

பண்டைத் தமிழகத்தில் உள்நாட்டு வணிகர் ''சாத்து'' என்றும் கப்பல் வணிகர் ''நாயகர்'' என்றும் குறிப்பிடப்பெற்றனர். இருவகை வாணிபமும் செய்து சிறப்படைந்தவர் ''எட்டி'' ஆயினர்.

## மண முறைகள்

''நகரத்தார் சமூகம் தமிழகத்தின் வரலாற்றுக்குத் தொடர்ச்சியூட்டிய சமூகம்; தமிழ்க் கலைக்கும் நாகரிகத்திற்கும் உயிரூட்டிய சமூகம்'' என்று குன்றக்குடி அடிகளார் தமது கட்டுரையொன்றில் தெரிவிக்கின்றார்கள். மூவேந்தர்களுக்குப் பின் பேணுவார் இன்றிக் கிடந்த ஆலயங்களைப் புதுக்கியும், புதியன எடுத்தும் தமிழ்க்கலைகளை வளர்த்த பெற்றியும், இவர்களிடையே இன்றும் நடைமுறையில் காணப்படும் தொன்மை வாய்ந்த சில பழக்கங்களும் திருமணச் சடங்கு முறைகளும் இவர்கள் தமிழகத்தின் வரலாற்றுக்கு உறுதுணை புரிந்த பாங்கினை உணர்த்தி நிற்கின்றன.

நயத்தக்க நாகரிகமுடைய நகரத்தார் பழக்க வழக்கங்களிற் சில சங்க இலக்கியங்களின் கண்ணும் சிலப்பதிகாரத்திலும் காணக்கிடக்கின்றன. தொல்காப்பியம் காட்டுவனவும் சில உள. இவற்றை நோக்குங்கால் இவர்கள் தொல்குடியினர் என்பது புலனாகும். நகரத்தார் திருமணங்களில் இன்றும் காணப்படும் அகநானூற்று மண முறைகள் சிலவும், பழக்க வழக்கங்கள் சிலவும் இக்காலச் சடங்கு முறைகளும் இக்கட்டுரையில் இடம் பெறுகின்றன.

### திருவிளக்கேற்றுதல்

திருமணம் தொடங்கும்போது, உள்வீட்டில் திருவிளக்கேற்றி வைப்பார்கள். திருமணம் முடியும்வரை இவ்விளக்கு ஒளி தந்து கொண்டிருக்கும். இதனை அகநானூறு ''மனைவிளக்குறுத்து'' (86) என்று குறிப்பிடுகிறது.

### பூமண மிடுதல்

பூவைக் கொண்டும் நெல்லைக் கொண்டும் மணமக்களைத்தொட்டு, நெருங்கிய உறவினர்கள் வாழ்த்துதல் இன்றும் செட்டி நாட்டில் வழக்கமாயிருக்கிறது. இதனைப் 'பூமணமிடுதல்' எனவும், அரிமணமிடுதல்; எனவும் கூறுவர். இதனை

''நெல்லொடு தூஉய்'' எனவும்
''நீரொடு செரிந்த ஈரிதழ் அலரி
பல்விருங் கதுப்பின்நெல்லொடு தயங்க'' எனவும்

வரும் அகநானூற்றுப் பாடல்களால் அறியலாம்.

மணமேடையில் மணமக்கள் தலையில் அட்சதை, நெல், அறுகம்பூ ஆகியவற்றைப் போட்டு அறுகிடுதல் இன்றும் காணலாம். 'மங்கைக்கு அறுகிட வந்திருந்தவர் மணப் பந்தலில்'' என்ற ஔவையார் பாடலை இது நினைவுக்குக் கொண்டுவருகிறது.

### முளைப்பாலிகை-மாமுதுபார்ப்பான்

''மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட தீவலம் செய்வது'' என்று கூறப்பட்ட முறையில் கோவலன் கண்ணகி திருமணம் நடைபெற்றது. இன்றும் அம்முறை வழக்கில் இருப்பது யாவரும் அறிந்ததே. மேலும் கண்ணகி திரு

மணத்தை வாழ்த்திய மகளிர் கைகளில் ''விரித்த பாலிகை முளைக்குட நிரையும்'' இருந்தது, இங்கும் மணைக்குப் பக்கத்தில் 'முளைப்பாலிகை' இருப்பதைக் காணலாம்.

**காப்புக் கட்டுதல்**

மங்கல நிகழ்ச்சிகளில், அந்நிகழ்ச்சிக்கு உரியவர்கள் கையில் காப்புக் கட்டுவது வழக்கம். அகநானூற்றில் திருமண நிகழ்ச்சிகளை விவரிக்கும் பாடலில் அறுகம்புல் தண்டுகளால் வெள்ளி நூலில் கோத்த ஒரு காப்புக் கட்டப்பெற்றதாக வருகிறது. நிகழ்ச்சி தொடங்கும்போது இக்காப்பு கட்டப்பட்டு, நிகழ்ச்சி முடிவடைந்த பின்னர் அவிழ்க்கப்படும்.

**சாமிக்குப் படைத்தல்**

''படைப்பு'' என்பதும் ''சாமிக்குப் படைக்கிறது'' என்பதும் தெய்வமாகிய தம் முன்னோர்களைக்கருதி நகரத்தார்கள் செய்வதாகும். திருமணம் முதலிய மங்கல விழாக்கள் வருமாகில் அவற்றுக்கு முந்திய நாட்களில் இப் படைப்பை அவர்கள் மேற்கொள்வார்கள்.

**வேறுவைத்தல்**

மணமானபின் மணமக்களைத் தனிக் குடித்தனமாக வேறு வைப்பது பற்றிய அடிகள் கண்ணகி கோவலன் கதையான சிலப்பதிகாரத்தில் 'மனையறம் படுத்த காதை' யில் வருகின்றன.

''வேறுபடு திருவின் வீறுபெறக் காண
உரிமைச் சுற்றமொடு ஒருதனிப் புணர்க்க,''

என்றார் இளங்கோ அடிகளும்.

தனித் தன்மைவாய்ந்த இப்பண்பு செட்டி நாட்டுக்கே உரியது. தந்தையும் மகனும் ஒரே வீட்டில் இருப்பினும் தனித்தனியே குடும்பம் நடத்துவதனையும், தனியாக உணவாக்கிக் கொள்வதையும், தனித்தனியே விருந்தினரை உபசரிப்பதையும் இவர்களிடத்தில் இன்றும் காணலாம்.

இனி, நகரத்தார் திருமணங்களில் நடைபெறும் வேறு சில சடங்குகளும் பின்வருமாறு உள்ளன.

சீர் வைக்கப்போவது, மாப்பிள்ளை அறிவது, நாட் குறிப்பது, உப்பெடுத்துவது, கழுத்துரு வாங்கப்போவது, பெண்ணெடுக்கிக் காட்டுவது, பிள்ளையெடுக்கிப் பிறந்த வீட்டுக்குப்போவது ஆகியனவாம்.

சக்தி வழிபாடு என்னும் பூரங்கழித்தல், குடியழைத்தல், வேவு எடுத்தல் என்பனவும் செய்யப்படுகின்றன.

வேவு எடுத்தல் என்பது தமது பெண் புகுந்த இடத்தில் சிறப்போடு வாழ, அவளுக்குத் தந்தை சொத்தில் பங்கில்லை என்ற மனக்குறையை அகற்ற அவளுடன் பிறந்த ஆண்மக்கள் அவள் வீட்டில் நடைபெறும் ஒவ்வொரு விசேடத்திற்கும் அனைத்து உணவு வகைகளையும் தலைத்தூக்காகத் தாமே கொண்டு செல்வது ஆகும். இது தொன்மையான பழக்கம் ஆகும். இன்று சீர் வரிசைகளை ஊர்வலம்போல ஆட்களின் தலைமேலேற்றிக்கொண்டு சென்று பின்னர் வீட்டில் தம்தம் தலைமீது ஏற்றி, அறையினுள் சென்று பின்னர் இறக்கிவைப்பதைக் காணும்போது இதன் பொருள் விளங்கும்.

வேவு, ஆடிவேவு, கார்த்திகை வேவு, பொங்கல்வேவு பிள்ளையார் நோன்பு வேவு, மாமவேவு எனப்பல வகைப்படும். பெண்வீட்டார் மாப்பிள்ளை வீட்டாருக்குக் கொண்டுசெல்வனவும் ஆகிய சீர்வரிசைகளை இது குறிக்கிறது.

**தொல்காப்பியநெறி பின்பற்றப்படுதல்**

பொருள்வயிற் பிரிந்து கடல் கடந்து செல்லும்போது தலைவியை உடன் அழைத்துச் செல்லும் பழக்கம் தலைவற்கு இல்லை எனக் கூறவந்த தொல்காப்பியர்

''முந்நீர் வழக்கம் மகடூ வோடில்லை''

(தொல், பொருள். அகத். 34)

என்று கூறிச் சென்ருர். அவ்விதிக்கிணங்க அண்மைக் காலம்வரை பெண்டிரைக் கடல் கடந்து அந்நிய நாடுகளுக்கு அழைத்துச் செல்லும் பழக்கம் இவர்களிடம் ஏற்பட்டதில்லை என்பது உணரத்தக்கது. இதே கருத்தை, 12-ம் நூற்ருண்டில் வாழ்ந்த நாற்கவிராச நம்பி, தம் அகப்பொருள் விளக்கத்தில்,

''குலமட மாதரொடு, கலமிசைச் சேறலும்
பாசறைச் சேறலும் பழுதெனமொழிப''

என்று கூறிஞர்.

**தடுக்கு முடைதல்**

செட்டி நாட்டுத் தடுக்கு சிறப்புடையது. அழகுமிக்கது, ஈராயிரம் ஆண்டுத் தொன்மையுடையதுமாகும். தடுக்கிட்டு, உணவு உண்ண அழைக்கும் பழக்கம் இன்றும் செட்டிநாட்டில் உண்டு. பனையினது குறுத்து ஓலையில் பல வண்ணங்கள் உள்ளனவாகத் தடுக்குகளையும், பெட்டிகளையும் பிற பல பொருள் களையும் தமது கைத்திறத்தால் நகரத்தார் பெண்மக்கள் இன்றும் செய்து வருகின்றனர்.

கண்ணகி கோவலனுக்குத் ''தாலப்புல்லின் வால்வெண் தோட்டு, கைவன் மகடூஉக் கவின் பெறப் புனைந்த செய்வினைத் தவிசு'' இட்டு உணவு படைத்தாள் என்பதனைச் சிலப்பதிகாரம் கூறுகிறது.

**கும்மாயம்**

''பயிற்றுத்தன்மை கெடாது கும்மாயமியற்றி'' என்று மணிமேகலையில் ஓர் உணவு வகை குறிக்கப்பெற்றிருக்கிறது. புழுக்கிய பச்சைப் பயிற்றோடு சருக்கரை முதலியன கூட்டி ஆக்கப்படுவதொரு சிற்றுண்டி என்று இதற்கு டாக்டர் உ. வெ. சாமிநாத ஐயரவர்கள் விளக்கம் எழுதியுள்ளார்கள். இந்த உணவு இன்றும் செட்டிநாட்டில் ஆக்கப் பெருகின்றது.

## புள்ளி விவரம்

இப்பட்டியலில் ஒவ்வோர் ஊரிலும் உள்ள மொத்த மக்கள் தொகையும் புள்ளிக் கணக்கும் மணமாகவேண்டிய 16 வயதுக்கு மேற்பட்ட ஆண்கள் பெண்கள் விவரமும் அடங்கியுள்ளது.

இப்புள்ளி விவரம் பராபவ ஸ்ரீ ஆவணி மீ 31உ (16—9—1967) வரையில் கிடைத்த கணக்கு விவரப்படி தொகுத்ததாகும். நகரத்தார் ஐக்கிய சங்கத்தாரால் பெருமுயற்சியின் பேரில் சேகரிக்கப்பட்டது.

| வ. எண். | ஊர் பெயர் | 16 வயதுக்கு மேல் மணமாக வேண்டிய ஆண் | பெண் | ஊர் மொத்தப்புள்ளிகள் | ஊர்மக்கள் தொகை |
|---|---|---|---|---|---|
| 1 | தேவகோட்டை | 704 | 506 | 2389 | 8633 |
| 2 | காரைக்குடி | 509 | 318 | 1725 | 6334 |
| 3 | வலையபட்டி | 249 | 182 | 837 | 3078 |
| 4 | பள்ளத்தூர் | 224 | 125 | 620 | 2223 |
| 5 | நாட்டரசன்கோட்டை | 175 | 130 | 555 | 1886 |
| 6 | கண்டனூர் | 181 | 104 | 484 | 1733 |
| 7 | அரிமளம் | 116 | 94 | 481 | 1622 |
| 8 | ராயவரம் | 158 | 96 | 461 | 1676 |
| 9 | குளிபிரை | 126 | 113 | 453 | 1601 |
| 10 | கடியாபட்டி | 133 | 99 | 446 | 1583 |
| 11 | வேந்தன்பட்டி | 143 | 106 | 431 | 1609 |
| 12 | நற்சாந்துப்பட்டி | 136 | 121 | 396 | 1529 |
| 13 | நெற்குப்பை | 136 | 105 | 387 | 1488 |
| 14 | கோனபட்டு | 117 | 64 | 375 | 1293 |
| 15 | புதுவயல் | 120 | 77 | 363 | 1224 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 16 | கண்டவராயன்பட்டி | 119 | 88 | 352 | 1272 |
| 17 | கீழச்சிவல்பட்டி | 115 | 111 | 345 | 1303 |
| 18 | கோட்டையூர் | 129 | 78 | 338 | 1243 |
| 19 | கானாடுகாத்தான் | 97 | 56 | 327 | 1113 |
| 20 | ஒ. சிறுவயல் | 97 | 62 | 297 | 1029 |
| 21 | பாகனேரி | 112 | 67 | 293 | 1024 |
| 22 | கல்லல் | 99 | 82 | 292 | 1086 |
| 23 | மேலச்சிவபுரி | 105 | 68 | 289 | 1056 |
| 24 | கண்டரமாணிக்கம் | 112 | 62 | 286 | 1045 |
| 25 | ஆத்தன்குடி | 92 | 64 | 281 | 1057 |
| 26 | பி. அழகாபுரி | 80 | 78 | 278 | 1065 |
| 27 | பொ.புதுப்பட்டி | 90 | 74 | 255 | 942 |
| 28 | ஆராவயல் | 88 | 53 | 235 | 980 |
| 29 | ஆ. தெக்களூர் | 76 | 65 | 216 | 887 |
| 30 | கொத்தமங்கலம் | 55 | 41 | 204 | 661 |
| 31 | கொப்பனாபட்டி | 70 | 50 | 203 | 766 |
| 32 | ராங்கியம் | 59 | 38 | 201 | 702 |
| 33 | பூலாங்குரிச்சி | 76 | 44 | 199 | 755 |
| 34 | சிறுகூடற்பட்டி | 74 | 61 | 198 | 740 |
| 35 | நேமத்தான்பட்டி | 62 | 36 | 195 | 691 |
| 36 | வேகுபட்டி | 81 | 62 | 192 | 752 |
| 37 | விரையாச்சிலை | 63 | 53 | 182 | 679 |
| 38 | நாச்சியாபுரம் | 65 | 56 | 181 | 755 |
| 39 | அலவாக்கோட்டை | 69 | 55 | 179 | 625 |
| 40 | கல்லுப்பட்டி | 62 | 46 | 165 | 626 |
| 41 | பனையப்பட்டி | 62 | 46 | 165 | 626 |
| 42 | சொக்கநாதபுரம் | 52 | 40 | 162 | 610 |
| 43 | குருவிகொண்டான்பட்டி | 49 | 31 | 162 | 578 |
| 44 | மிதிலைப்பட்டி | 52 | 44 | 154 | 541 |
| 45 | ஆவினிப்பட்டி | 49 | 34 | 143 | 541 |
| 46 | பலவான்குடி | 34 | 31 | 135 | 486 |
| 47 | ஆ. முத்துப்பட்டணம் | 46 | 32 | 134 | 501 |
| 48 | அரண்மனைச் சிறுவயல் | 43 | 36 | 126 | 412 |
| 49 | உலகம்பட்டி | 51 | 28 | 124 | 475 |
| 50 | மதகுப்பட்டி | 27 | 25 | 120 | 398 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 51 | செவ்வூர் | 43 | 30 | 116 | 472 |
| 52 | அரியக்குடி | 35 | 24 | 115 | 396 |
| 53 | சொக்கலிங்கம்புதூர் | 29 | 21 | 105 | 398 |
| 54 | மகிபாலன்பட்டி | 29 | 18 | 102 | 396 |
| 55 | விராமதி | 29 | 33 | 101 | 381 |
| 56 | ஒக்கூர் | 27 | 16 | 95 | 329 |
| 57 | கீழப்பூங்குடி | 24 | 16 | 94 | 294 |
| 58 | நடராஜபுரம் | 29 | 26 | 89 | 307 |
| 59 | கோ. அழகாபுரி | 23 | 22 | 88 | 299 |
| 60 | பட்டமங்கலம் | 21 | 22 | 84 | 317 |
| 61 | வி. லெட்சுமிபுரம் | 18 | 14 | 82 | 272 |
| 62 | கானையார் மங்கலம் | 31 | 27 | 79 | 305 |
| 63 | கொ. லெட்சுமிபுரம் | 19 | 19 | 69 | 231 |
| 64 | வெற்றியூர் | 26 | 20 | 68 | 289 |
| 65 | சிராவயல் | 24 | 13 | 63 | 226 |
| 66 | தேனிப்பட்டி | 19 | 9 | 63 | 219 |
| 67 | மானகிரி | 19 | 17 | 62 | 210 |
| 68 | செம்பனூர் | 16 | 8 | 43 | 158 |
| 69 | கொ. அழகாபுரி | 17 | 7 | 41 | 135 |
| 70 | கருங்குளம் | 13 | 7 | 40 | 155 |
| 71 | தாணிச்சாவூரணி | 25 | 10 | 30 | 138 |
| 72 | அமராவதிபுதூர் | 6 | 5 | 25 | 83 |
| 73 | சக்கந்தி | 4 | 3 | 22 | 64 |
| 74 | சோழபுரம் | 8 | 3 | 20 | 69 |
| 75 | பனங்குடி | 5 | 5 | 16 | 55 |
| 76 | பிள்ளையார்பட்டி | — | — | 2 | 2 |
| | | 6378 | 4516 | 19724 | 71736 |

## காப்பி அல்ல இது அசல்

நானும் நண்பர் ஒருவரும் ஒருமுறை நமது சங்க முன்னாள் தலைவர் திரு. அரு. லெ. வெ. நடராசன் செட்டியார் அவர்கள் இல்லத்திற்குச் சென்றிருந்தோம். விருந்தினரை வரவேற்பதிலும் உபசரிப்பதிலும் செட்டியார் அவர்கள் வல்லவர். குளிர் பானமோ அல்லது சுடு பானமோ ஏதாவது ஒன்றை அருந்துமாறு எங்களை வற்புறுத்தினார்கள். நாங்களும் இப்போதுதான் காப்பி அருந்தினோம், பரவாயில்லை வேண்டாம் என மறுத்துரைத்தோம். செட்டியார் அவர்கள் விடவில்லை, நீங்கள் முன்பு அருந்தியது 'காப்பி (நகல்) நான் தருவது அசல்! இதனை அருந்துக்கள்' என்றார். பெருநகைப்பிற்கிடையே நாங்கள் 'அசலை' அருந்தி விடைபெற்றோம்!

**தகவல்: S. தியாகராசன்**

# சிறப்பு மலருக்கு விளம்பரம் சேகரித்து உதவிய நண்பர்கள் . . .



### சேலம் சென்ற நால்வர்:

பக்தியும், அனுபவமும் மிக்க *AL.* சிங்காரம் செட்டியார்
திருக்குறள் பேசும் *AT.* சிங்காரம் செட்டியார்
தகைமைசால் *NK.* நாகப்ப செட்டியார்
தமிழார்வமிக்க சங்கத்தின் பொதுச்செயலாளர்
*SM.* ரெங்கநாதன்

### சென்னை சென்ற மூவர்:

சங்கத்திற்கு அரும்பணியாற்றும்
சங்கத்தின் நிர்வாகச் செயலாளர்
அன்புமிகு *L.* சோமு
அடக்கமே உருவான செயல் வீரர் *AR.* முத்துவீரப்பன்
சோர்வறியா *R.* சேக்கப்பன்

### மதுரை மாநகர் சென்ற இருவர்:

அயராது உழைக்கும் ஆற்றல்மிகு *L.* சோமு
ஆர்வமிக்க வழக்கறிஞர் *S.* தியாகராசன்
மதுரையில் ஒத்துழைப்பு நல்கிய கலாபிரிண்ட்ஸ்
*S.* சொக்கலிங்கம்

### கோவை நகரில்:

திருவாளர்கள்,
*SM. KR.* கருப்பன் செட்டியார் □ *L.* சோமு □
*SM.* ரெங்கநாதன் □ *S.* தியாகராசன் □
*SP.* இராமசாமி □ *S.* அழகப்பன் □
*SM.* நாகப்பன் □ ராம. ஏகப்பன் □
*RM.* மெய்யப்பன் □ *R.* சேக்கப்பன் □
*RL.* சாத்தப்பன் □ *AT.* சிங்காரம்
*RM.* இராமநாதன் □ *NK.* நாகப்ப செட்டியார் □
*K.* மாணிக்கம் செட்டியார் □
*KR.* ஆண்டியப்ப செட்டியார் □
*PL. S. RM.* இராமநாதன் செட்டியார் □
*PL. S. RM.* சிவனடியான் செட்டியார்

இறுதி நேரத்தில் ஏராளமான விளம்பரங்கள் தந்த
*AR.* முத்துவீரப்பன் □ *AR. K.* இராமநாதன் □



கவியரசர் வெளியிட்ட கவின்மிகு
மலரைப் புவியரசர் பெற்று
புன்னகை பூக்கின்றூர்.



மலரின் பிரதியை
மகிழ்வுடன் பெற்ற
மலரின் ஆசான்
மணிச்சாத் தப்பன்!



அரசர் உரையாற்றும் ஆனந்தக் காட்சி




அவையோரை ஈர்க்கும் அற்புதப் பேச்சு
சுப. அண்ணாமலையின் சொல் அலங்காரம்



பேச்சினை ரசிக்கும் ஆண்களும்......



......பெருந் திரளாய்க் கூடிய பெண்களும்



# ஓங்கு பனைக்கு ஒப்பான உத்தமர்கள்

திரு. என். கே. நாகப்ப செட்டியார்

நம் கோயமுத்தூர் நகரத்தார் சங்கம் பல வகையால் பெரும் பாக்கியம் பெற்றுள்ளது. நம் சங்கம் பத்து வருடங்களுக்கு முன்னர் ஆரம்பிக்கப்பட்டு, 8 வருடங்களாக ஆமை வேகத்தில் நடந்துவந்து, பின்னர் இரு கண்கள் போன்ற இரு செயலாளர்களின் தீவிர முயற்சிகளின் காரணமாக சங்கக் கட்டிடம் இன்று நம் கண்முன் காட்சியளிக்கிறது.

**பொதுச் செயலாளர்**

நம் மரபினரில் உழைப்பினால் உயர்ந்த உத்தமராகிய சிராவயல் திரு. மு. சோமசுந்தரம் செட்டியாரவர்களின் தவக் குழந்தைகளில் ஒருவரான திரு. எஸ்எம். ரெங்கநாதன் அவர்கள் பொதுச் செயலாளராக நம் நகரத்தார் சங்கத்திற்குக் கிடைத்தது நம் சங்கம் செய்த பாக்கியமே!

அன்னாரின் தந்தையார் அவர்கள் பர்மாவில் 1925-இல் ''தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கம்'' என்று ஆரம்பித்து, கல்விக்கூடம் அமைத்து, இளைஞர்களை உற்சாகத்துடன் கல்வி பயிலச் செய்தார். சுமார் 20 நகரத்தார் மாணவர்களைக்கொண்டு திருவிளையாடற்புராணம் போன்ற தெய்வீகக் கதைகளை நாடகமாக அமைத்து, ஒவ்வொரு வருடமும் பல ஆயிரம் ரூபாய்களை நன்கொடையாக வசூலித்தார். மேலும் பர்மாவிலுள்ள நம் சமூகத்தினர் தொழில் நடத்தும் ஸ்தாபனங்களில் நன்கொடைகள் வசூலித்தார். ரெங்கோனிலிருந்து 6 மைல் தூரத்தில் கம்பை என்ற இடத்தில் 1927-ஆம் ஆண்டு ''NATTUKKOTTAI CHETTIAR RESIDENTIAL SCHOOL'' என்ற கல்விக் கூடத்தை அமைத்தார்கள்.

நம் மரபினர் கல்வியில் பிற்போக்கிலிருப்பதை மனதிற்கொண்டு, வெள்ளையர் ஆட்சியில் நம் சமூகத்திற்கு மட்டும் 6 மாதத்திற்கு ஒருமுறை ஒவ்வொரு வகுப்பிற்கும் தேர்வு வைத்து, 10 வகுப்பையும் 5 வருடத்தில் தேர்ச்சியடையச்செய்து பட்டப்படிப்புக்குச் செல்ல வழிவகுத்துக் கொடுத்த பெருமையும் அவருக்கு உண்டு. அவர்களால் பயனடைந்து இப்போது பலர் செல்வந்தர்களாகத் திகழ்கிறார்கள். ''மு. சோம'' அவர்களை மறக்கமுடியாதவர்களாக இன்றும் எண்ணற்ற பலர் இருக்கின்றனர்.

அப்படிப்பட்ட ''மு. சோம'' அவர்களுக்கு மைந்தனுகப் பிறந்த உத்தமசீலர் திரு. எஸ்எம். ரெங்கனுதன் அவர்கள்தான் நம் நகரத்தார் சங்கம் தோன்றிய 1964-லிருந்து இன்று 1974 வரை பொறுமையோடு, மனந்தளர்வின்றி புன்முறுவலுடன், இன்சொற்களால் உரையாடி, முகமலர்ச்சியோடு பல பணிகள் ஆற்றி, கேட்காமலே பொருள்தந்து, இப்போது பொதுச் செயலாளராகப் பொறுப்பேற்று நம் சங்கத்தை வளர்த்துக் காப்பாற்றிய பெருமை அவருக்கும் சார்ந்ததே.

**நிர்வாகச் செயலாளர்**

திரு. எல். சோமு அவர்கள் நமது சங்கத்தின் நிர்வாகச் செயலாளர் ஆனவுடன் சங்க வேலைகள் மிகச் சுறுசுறுப்படைந்தன. அன்னாரின் முகமலர்ச்சி யால், படமெடுத்த ஆதிசேஷன்கூட சோமசுந்தரப் பெருமானைக் கண்டவுடன் மயங்கி, எல்லோரும் என்ன செய்யவேண்டுமென்று நிமிர்ந்து கேட்டு, உடனே ஆக்க வேலைகளில் புகுந்து அவரவர்கள் தொண்டினைச் செய்கிறுர்கள்.

நம் சங்கத்திற்காக அயராது இரவு பகல் பாராமல் அருந்தொண்டாற் றியவர் திரு. சோமு. துயருற்றவருக்குத் துயர்களைதலும், நட்பும், தயையும், கொடையும் பிறவிக் குணமாகப் பெற்ற பெருஞ்சீலரை நம் சங்கம் பெற்றிருக்கிறது.

"உத்தமர் தாம் ஈயுமிடத்து ஓங்குபனை போல்வரே"

என்பதுபோல, நீருற்றிப் பாதுகாவாமலிருக்கும்போதே பனைமரம் எல்லாங் கொடுத்து எல்லாவற்றிற்கும் மிகவும் பயன்படும். நம் சோமு அவர்கள் ஓங்கி வளர்ந்த ஓர் பனைமரத்திற்கு ஒப்பானவர்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

**சங்கக் கட்டிடம்**

இரு செயலாளர்களின் நன்முயற்சியாலும், சலியா உழைப்பாலும் நம் சங்கக் கட்டிடம் தலைநிமிர்ந்து ஸ்ரீ ஆனந்த நடராஜரை மையமாகக் கொண்டு எல்லோருக்கும் ஆசிகூறி, ஆலவாய் அண்ணலின் திருவருளால் நான்மாடக் கட்டிடமாகச் செழுஞ்சாந்தின் நறுமணம்பெற்று உயர்ந்து, வருங்காலத்தவர்க்கு விழுமிய வழிகாட்டியாக இருந்து வருகிறது.

**"காண்டலே கருத்தாய் நினைத்திருந்தேன் மனம் புகுந்தாய் கழலடி**
**பூண்டு கொண்டொழிந்தேன் புறம்போயினு லறையோ**
**ஈண்டு மாடங்கள் நீண்டமாளிகை மேலெழு கொடிவானிளம் மதி**
**தீண்டி வந்துலவும் திருவாரூ ரம்மானே''**

என்று திருநாவுக்கரசு நாயனுர் பாடியது போல, நம் சங்கம் ஈண்டு மாடங்கள் நீண்ட மாளிகைகளாக வளர்ந்து வர, ஆக்கவேலைகள் புரியும் செயலாளர்களான திரு. எஸ்எம். ரெங்கநாதன், திரு. எல். சோமு இவர்களுக்கு இறைவன் நீண்ட ஆயுளைத் தந்து, இன்னும் சிறப்புறச் செய்வார்களாக!



# கோவை நகரத்தார் சங்கக் கட்டிடத் திறப்பு விழா நிகழ்ச்சிகள்

17—11—74-ம் தேதி ஞாயிற்றுக்கிழமை காலை 7 மணியிலிருந்தே கோவையில் வாழும் நகரத்தார் பெருமக்கள் ஆண்களும் பெண்களும் அணி அணியாய்த் திரண்டு, ஆர். எஸ். புரம் கௌலிபிரவுன் ரோட்டிலுள்ள சங்கத்தின் புதிய கட்டிடத்தை நோக்கி வந்து சேர்ந்தனர்.

பெருமதிப்பிற்குரிய செட்டிநாட்டரசர் பெருந்தகை மு. அ. முத்தையா செட்டியாரவர்களையும், உயர்திரு லெ. அழகு சுந்தரம் செட்டியாரவர்களையும், கவிஞர் கண்ணதாசனவர்களையும், டாக்டர் சுப. அண்ணாமலை அவர்களையும் காலை 10 மணியளவில் சங்க நிருவாகக் குழுவினரும் மற்ற நகரத்தார் பெருமக்களும் மேள வாத்தியம் முழங்க வரவேற்றார்கள்.

அரசர் அவர்கள் சங்கக் கட்டிடத்தையும், சங்கத்தலைவர் திரு SM. KR. கருப்பஞ் செட்டியாரவர்கள் ராணி மெய்யம்மை ஆச்சி ஹாலில், ராணி மெய்யம்மை ஆச்சி படத்தையும் திறந்து வைத்தார்கள்.

பின்னர் வண்ண விளக்குகளாலும், தோரணங்களாலும், பூக்களாலும் அலங்கரிக்கப்பட்ட எழில் மிகு பந்தலில் இறை வணக்கத்துடன் விழா நிகழ்ச்சிகள் இனிது துவங்கின.

வந்திருந்த அனைவரையும் சங்கத்தலைவர் வருக வருகவென உளமார வரவேற்று உரை நிகழ்த்தினார். கட்டிட நிதிக்கு ரூ. 25,000/- நன்கொடை அளித்த அரசரின் கொடை உள்ளத்தையும், ''ஈத்து உவத்தல் இன்பம்'' என்பதை நன்கு உணர்ந்து அள்ளித் தந்த பெருமக்கள் அனைவரையும் போற்றிப் புகழ்ந்தார். அடுத்து சங்கப் பொதுச் செயலாளர் திரு SM. ரெங்கநாதன் அவர்கள் பலரிட மிருந்து வந்த வாழ்த்துச் செய்திகளை வாசித்தார்.

ஆலை அதிபர் திரு. லெ. அழகு சுந்தரம் செட்டியார் அவர்கள் தமது தலைமையுரையில் நம்மவர்கள் ஒவ்வொரு தொழிலிலும் ஒவ்வொரு துறையிலும் ஈடுபடவேண்டும், வட்டித் தொழிலை விட்டுவிடக்கூடாது என்றும் கூறினார்கள்.

அடுத்துப் பேசிய அரசர் அவர்கள் 1938-இல் தாம் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தை முன் நின்று நடத்தியதை விளக்கினார்கள். நம் இனத்தவர்கள் இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் தொழில் ஆரம்பித்து வளர்ச்சி காண வேண்டும். நம் சமூக மரபுகளை விட்டுவிடாது சமுதாய சீர்திருத்தக் கருத்துக் களை ஏற்று நம் சமூகம் முன்னேற வேண்டும். இப்பொழுது கான்வெண்டில் பயிலும் நம் இளந் தலைமுறையினர் பெரியவர்களாகும்போது, சீர் முறை போன்றவை நாளாவட்டத்தில் தானாகவே மறைந்து சிக்கனச் சடங்குகள் பெரு கும் என்றார்கள். இந்தவிழாவில் ஆண்கள் திரண்டு வந்திருக்கும் அளவிற்குப் பெண்களும் பெரும் அளவில் திரண்டு வந்திருப்பது மிகவும் பாராட்டுதற்குரியது,

மாநில மாநாட்டில் கூட நம் பெண்கள் இவ்வளவு அதிகமாக வந்ததில்லை என்றூர்கள். திரு. AR. L. V. நடராசன் செட்டியார், திரு. SM. KR. கருப்பஞ் செட்டியார், திரு L. சோமு முதலானவர்கள் நகரத்தார் சங்கத்திற்குச் செய்துள்ள சேவையைப் பாராட்டினூர்கள்.

சங்கக் கட்டிடம் கட்டி முடிக்கச் சங்க நிருவாகச் செயலாளர் திரு. L. சோமு அவர்கள் எடுத்துக்கொண்ட பெரு முயற்சி, இடைவிடா உழைப்பு, இவற்றைப் பாராட்டும் வகையில், நகரத்தார் நண்பர்கள் சார்பில் அரசர் அவர்கள் திரு. L சோமு அவர்களுக்குப் பொன்னுடை போர்த்திக் கௌரவித்தார்கள்.

திரு. RL. சாத்தப்பனவர்கள்

''வணிகரின் குலத்தா ரோங்க
வளர்ந்தோங்கும் கட்டி டத்தைத்
தனியொரு மனித னுகத்
தவமுனி போல நின்று
பணிபுரிந் துயரச் செய்த
பண்பாளர்........."

எனப் போற்றி, திரு. சோமு அவர்களுக்கு வாழ்த்துப்பா வாசித்தளித்தார்கள்.

அதன்பின் திரு. சோமு அவர்கள் உணர்ச்சி வயப்பட்டு மனம் நெகிழ்ந்து, ''என்னை மிகைப் படுத்திப் பாராட்டி அன்பு வெள்ளத்தில் ஆழ்த்திவிட்டீர்கள். இந்தக் கட்டிடத்தைக் கட்டி முடிக்க நான் மட்டும் காரணமல்ல: என் தோளோடு தோள் நின்று இதற்காக அல்லும் பகலும் அயராது உழைத்த எல்லா நண்பர்களையும் நான் என்றுமே மறக்க முடியாது'' என்று ஆற்றிய உரையை நாம் என்றுமே மறக்க முடியாது.

பிறகு, திரு. S. V. N. நாகப்ப செட்டியாரவர்கள் சங்கத்துக்குச் செய்த சேவையைப் பாராட்டி அரசர் அன்னுருக்கும் பொன்னுடை போர்த்தினூர்கள்.

அதன் பின், நகரத்தார் சங்கக் கட்டிடத் திறப்புவிழா சிறப்பு மலரை வெளியிட்டு, முதல் பிரதியை அரசர் அவர்களிடமும் இரண்டாவது பிரதியை மலரின் பதிப்பாசிரியர் திரு. RL. சாத்தப்பன் அவர்களிடமும் கொடுத்து உரையாற்றிய கவிஞர் கண்ணதாசனவர்கள், ''15 ஆண்டுகளுக்கு முன்பு ஜாதியை அடிப்படையாகக் கொண்டு நடக்கும் எந்த நிகழ்ச்சிகளிலும் பங்குபெறக்கூடாது என்று மிகத் தீவிரமாக இருந்தவன் நான். ஆனுல் பலர் தங்களுடைய ஜாதியைத் தவிர மற்ற ஜாதிகள் ஒழியவேண்டும் என்று நினைக்கிறூர்கள். அதனுல் இது போன்ற நிகழ்ச்சிகளில் நான் இப்பொழுது உற்சாகமாகக் கலந்துகொள்கிறேன். சில சமுதாயத்தினர் சங்கங்கள் அமைத்து ஒருவருக்கொருவர் உதவிசெய்து முன்னேறி வருகின்றனர். ஆனுல் நம்முடைய சமுகத்தில் ஒருவர் கெட்டுவிட்டால் அவரை அப்படியே விட்டுவிடுகிறேம்; அவருக்குக் கைகொடுத்து உதவுவதில்லை; சிற்சில சமயம் கைதூக்கி விடுபவருக்கு அவர் முதல் விரோதி ஆவதும் உண்டு.

''இந்தக் கட்டிடத்தை இதோடு விட்டுவிடாமல் இன்னும் விரிவு படுத்த வேண்டும். அத்துடன் தையல், கூடை முடைதல் போன்ற கிராமத் தொழிலை யும் நகரத்தார் பெண்கள் செய்யவேண்டும்'' என்று கூறினர்.

கோவலன் நம் இனத்தவன்தான் என்பதை மிக நகைச்சுவையுடன் கவிஞர் கூறியபோது அவை கலகலத்தது.

அதற்குப்பின் பேசிய டாக்டர் சுப. அண்ணாமலை அவர்கள் சமூகம் முன்னேறச் சங்கம் செயல்படவேண்டிய முறைகளை விளக்கினர்கள். அடுத்து சங்க உறுப்பினர்கள் திருவாளர்கள் S. அண்ணாமலை, N.K. நாகப்ப செட்டியார், ராம. ராமனுதன், AT. சிங்காரம் செட்டியார், KR. ஆண்டியப்ப செட்டியார், AL. சிங்காரம் செட்டியார், சங்கத் துணைத்தலைவர் K. ராமனுதன் செட்டியார், SV.N. நாகப்ப செட்டியார், திரு. லெ. சிதம்பரம் ஆகியோர் சங்க வரலாறு பற்றியும் வளர்ச்சிபற்றியும் பேசினர்கள்.

பிற்பகல் 1 மணியளவில் நிர்வாகச் செயலாளர் திரு. L. சோமு அவர்கள் நன்றி நவிலக் கூட்டம் இனிது முடிந்தது.

வந்திருந்த அனைவரும் பிற்பகல் அறுசுவையுண்டி அருந்தி விடைபெற்றுச் சென்றனர். உணவும் உபசரிப்பும் மிக உயர்வாக இருந்தன.

அப்பொழுது நிர்வாகச் செயலாளரிடம் பல பெருமக்கள் ''நகரத்தார் சங்கத்திற்கு என்ன செய்யவேண்டுமோ சொல்லுங்கள் நாங்கள் செய்கிறோம்'' என்று இதய பூர்வமாகக் கூறிய உற்சாக வார்த்தைகள் இன்னும் நம் உள்ளத்தைத் தொட்டுக்கொண்டிருக்கின்றன.

வாருங்கள்! வாருங்கள்!! சங்கத்தில் எல்லோரும் உறுப்பினராகச் சேருங்கள். சீரிய யோசனைகளைச் சொல்லுங்கள். சீர்திருத்தக் கருத்துக்களைப் பரப்புங்கள். நாம் ஒன்று கூடிப் பேசி, உயர்வான கருத்துக்களை எடுத்துரைத்து, ஆக்கபூர்வமான பணிகளைச் செய்ய அரியதோர் வாய்ப்பு நமது சங்கத்தின் எழில் மிகு புதிய கட்டிடம்! ஒன்று பட்டு உயர்வோம் வாருங்கள்.

**வாழ்க நகரத்தார் சங்கம், வளர்க நகரத்தார் சமூகம்!**

—[நிகழ்ச்சி தொகுப்பு: திரு. S. அண்ணாமலை]




---

கடுகளவு பொருளேனும் வீணய்ப் போனல்
கலங்கிடுவார்; மனம்பதைப்பார்; புண்ணி யத்தைத்
தொடுகின்ற செயற்கென்றல் கோடி கோடி
தொகுத்ததெல்லாம் ஒருநொடியில் மனங்க னிந்து
கொடுத்துவிடும் வள்ளண்மை யுடையார்; அன்பு
குடிகொண்ட நெஞ்சத்தார்; வைய மெலாம்
தடுத்தாலும் நேர்மைவழி மாரு தேகும்
தகையுடையார் நகரத்தார் என்றும் வாழ்க!

**– நாரா. நாச்சியப்பன்**

---

# NAGARATHAR SANGAM, COIMBATORE

## LIFE MEMBERS

1. K. R. Andiappa Chettiar
2. S. V. N. Annamalai
3. VE. Alagappan
4. S. ST. Chidambaram Chettiar
5. SP. A. Chockalingam Chettiar
6. C. Chockalingam Chettiar
7. SP. Jayankondan Chettiar
8. K. Kannappa Chettiar
9. SM. KR. Karuppan Chettiar
10. AN. Kannappa Chettiar
11. PL. K. Kuppan Chettiar
12. MK. Kasi Chettiar
13. RM. K. Karuppan Chettiar
14. RM. A. Kasi Chettiar
15. C. Lakshmanan Chettiar
16. RM. Lakshmanan Chettiar
17. PL. L. Lakshmanan Chettiar
18. S. Lakshmanan Chettiar
19. VR. KR. L. Lakshmanan Chettiar
20. S. M. R. Murugappa Chettiar
21. SM. M. Muthappa Chettiar
22. AL. Manickam Chettiar
23. AR. Murugappan
24. RM. Meyyappa Chettiar
25. AR. Muthuveerappan
26. SP. Mani Chettiar
27. N. K. Nagappa Chettiar
28. N. Nagappa Chettiar
29. SM. Nagappa Chettiar
30. V. Narayanan Chettiar
31. RM. Natarajan
32. SE. SV. Narayanan
33. PR. PR. SP. Periakaruppan Chettiar
34. PL. Palaniappa Chettiar
35. S. Palaniappa Chettiar
36. ST. Palaniappa Chettiar
37. PL. S. RM. Ramanathan Chettiar
38. SM. Ranganathan Chettiar
39. SP. Ramasamy Chettiar
40. RM. Ranganathan Chettiar
41. K. Ramanathan Chettiar
42. PR. RM. Ramanathan Chettiar
43. AV. K. Ramanathan Chettiar
44. S. SA. Raman Chettiar
45. PR. M. S. Ramanathan Chettiar
46. AL. Singaram Chettiar
47. S. MR. S. Subbiah Chettiar
48. AT. Singaram Chettiar
49. S. R. M. Sathappa Chettiar
50. M. Sivagnanam Chettiar
51. M. SP. VR. Subramaniam Chettiar
52. S. Somasundaram Chettiar
53. P. S. S. Somasundaram Chettiar
54. RM. Sethuraman Chettiar
55. K. L. P. Subramaniam Chettiar
56. V. M. SP. Subramaniam Chettiar
57. SP. M. SP. Subramaniam Chettiar
58. SV. Sivanadian Chettiar
59. L. Somu
60. PL. S. Subramaniam Chettiar
61. R. Sekkappa Chettiar
62. PR. P. N. Thirunavukkarasu Chettiar
63. AN. Venkatachalam Chettiar
64. V. M. Vinaitheerthan Chettiar
65. RM. Valliappa Chettiar
66. Rama Yegappa Chettiar

உ
சிவமயம்

## நகரத்தார் என்றென்றும் செல்வத்துடன் திகழவேண்டும் என்று கேட்டுக்கொண்டதற்கு இணங்கிப் பாடுவார் முத்தப்ப செட்டியார் பாடியது

காடுவெட்டிப் போட்டுக் கடிய நிலந்திருத்தி
வீடுகட்டிக் கொண்டிருக்கும் வேல்வணிகர் வீடுகட்(கு)
அன்றைக்கு வந்தஎங்கள் அம்மா! இலக்குமியே
என்றைக்கும் நீங்கா திரு.

நின்மேலுமாணை நின்மகன்மேலு மாணைநின் மாக்கொழுநன்
தன்மேலுமாணை தமிழ்மேலுமாணை தவமா வணிகச்
சின்னஞ்சிறுவர் தெரியாத காளைய ரென்செயினும்
பின்னும்பொறுத் திருப்பாயே! பெரியஇலக்குமியே!

நீங்காது நின்மகனும் நெடிய திருமாலும்
பாங்காக அன்றுவந்த பாற்கடல்போல் — தேங்காமல்
நன்றாக நீஇருந்து நாளும் வளம்பெருக்கி
என்றைக்கும் நீங்கா திரு.

---

## நகரக் கோவில்களின் விபரம்

| கோவிலின் பெயர் | இறைவன் | இறைவி |
|---|---|---|
| இளையாற்றங்குடி | கயிலாசநாதர் | நித்தியகல்யாணி |
| மாற்றூர் | ஐநூற்றீசர் | பெரியநாயகி |
| வயிரவன்கோவில் | வளரொளிநாதர் | வடிவுடையம்மை |
| இரணிக்கோவில் | ஆட்கொண்டநாதர் | சிவபுரந்தேவி |
| பிள்ளையார்பட்டி | மருதீசர் | வாடாமலர்மங்கை |
| நேமம் | ஜெயங்கொண்டசோழீசர் | சவுந்தரநாயகி |
| இலுப்பைக்குடி | தான்தோன்றியீசர் | சவுந்தரநாயகி |
| சூரக்குடி | தேசிகநாதர் | ஆவுடைநாயகி |
| வேலங்குடி | கண்டீசுவரர் | காமாட்சியம்மை |

## முகிலே! கூறு ...

வான மிருந்து வழங்கிடினும் வையத்துத்
தானம் அளிக்கும் தனவணிகர் — மோனமுடன்
காலத்தில் ஈயும் கருணை அறிவாயோ?
கோலத் திருமுகிலே கூறு.

கலைவளர்க்கும் சிலர் கலங்கா மனம்போல்
அலைகொழித்துக் காக்கின்ற ஆறே! — நிலையில்
பெருக்கெடுத்த போதும் பிறழாமை உன்பால்
இருக்குமோ நீயும் இயம்பு.

திரைகடலுக் கப்பாலும் செந்தமிழர் பண்பை
உரைகொள்ளச் செய்தார் உளம்போல் — வரைவின்றி
வீறுகொண் டியங்கும் விரைகாலே இப்புவியில்
வேறெங்கு கண்டாய் விளம்பு.

– கமலாவதிகதிரேசன்

உ

சிவமயம்

# கோவை நகரத்தார் சங்கக் கட்டிடத் திறப்பு விழா அன்று சங்க நிர்வாகச் செயலாளர் உயர்திரு L. சோமு அவர்கட்கு பொன்னாடை போர்த்தி வாசித்தளித்த

# வாழ்த்துப்பா

சங்கத்தைக் கட்டு தற்குச் சரியான இடம்பி டித்து
அங்கதன் பின்னே ஆறு ஆண்டுகள் சென்ற பின்னும்
மங்கலப் பொறுப்பை ஏற்கும் மனிதர்கள் பலர்இ ருந்தும்
சங்கத்துப் பொறுப்பை ஏற்ற தங்கமே! சோமு வாழ்க!

தன்சொந்த நலன்கள் இல்லை தன்தொழில் கவனம் இல்லை
என்சொந்தம் நகரத் தாரின் கட்டிடம் என்றே எண்ணி,
அன்றுதொட் டாரம் பித்த அலுவல்கள் அனைத்தும் தானே
நின்றுநல் நிறைவு செய்த நிர்மல! சோமு வாழ்க!

வணிகரின் குலத்தா ரோங்க வளர்ந்தோங்கும் கட்டி டத்தைத்
தனியொரு மனித னாகத் தவமுனி போல நின்று
பணிபுரிந் துயரச் செய்த பண்பாள! உன்னை யல்லாமல்
தனிமனை · ஏது? நண்ப! தகவுசால் சோமு வாழ்க!

பொருளிலாப் போழ்தும் உன்றன் பொருளையே தந்தாய்! நீள்கார்
இருளுக்குச் சோமன்[1] போல எம்குலச் சோமன் ஆனாய்!
உருவான கட்டி டத்தின் உயர்வெலாம் உன்னால் அன்றோ?
அருளாள! சோமன்[2] போர்த்தி அன்பினைத் தெரிவிக் கின்றோம்.

1 நிலா 2 பொன்னாடை

கோயமுத்தூர்,
ஆனந்த-கார்த்திகை-2
17—11—1974

இங்ஙனம்,

**நகரத்தார் நண்பர்கள்**

ஆக்கியோன் : திரு. R. L. சாத்தப்பன்



## காசே தெய்வம்

பெருஞ்செட்டி நாட்டில் பெண்ணெனப பிறந்தால்
வேண்டிய அம்சம் முன்றென விரியும்!
பொன்னிறப் பொலிவெனும் பொல்லா அழகும்
பெற்றவர் சீர்தனப் பெருமையும் சாலேயில்
கற்ற இக் காலக் கல்வியும் இருந்தால்
மற்றவள் வாழ்க்கை வாகைக் குரியதே!
'வா வா' என்று மணிமேடை அவளே
ஆவலாய் அழைக்கும்! அவள்இத் தகுதியில்
ஒன்றிற் குறையினும் கடவுளே உறுதுணே!
திக்கற் ரேர்க்குத் தெய்வமே துணேஎனில்
கறுப்புக் கன்னிக்குக் காசே தெய்வம்!

சே. கனகசபை, பி.ஏ.

